Regd. No. 2975. ஸ்ரீ:

# SRI RAMANUJAN

*Editor*: P. B. ANNANGARACHARYA, L. KANCHEEPURAM.

# ஸ்ரீ ராமாநுஜன் 227 228

ஆசிரியர்: ஸ்ரீகாஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்.

வருடச் சந்தா ரூ. 6 ஜீவியச் சந்தா ரூ. 116.

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வாரெம்பெருமானர்ஜீயர் திருவடிகளே சரணம்

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி *
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி * — ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம் வாழி *
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

30—11—1967ல் வெளியிடப்பட்டது.

# ஸ்ரீ ராமாநுஜன்—227, 228



சென்னை ஸத்க்ரந்த ப்ரகாசனஸபா மூலமாக மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை.

ஆசிரியர் : ஸ்ரீ காஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்.

ஸம்புடம் 19 | ப்லவங்கஸு கார்த்திகை, மார்கழிமீ 1967 நவம்பர், டிஸம்பர். | ஸஞ்சிகை 11, 12

## நூற்றெட்டுத் திருப்பதியந்தாதி—2.

### 2. திருவுறையூர்.

சிறப்புடைய செல்வத் திருப்பதிகள் போல*
மறப்புடைய நாயேன் மனத்துள்*—உறப்போந்
அறந்தையாநின்ற வரங்கா திருவாழ்*
உறந்தையா யிங்குறைந்த தோது.

| | | | |
|---|---|---|---|
| மறப்பு உடைய நாயேன் மனத்துள் | நிலைநின்ற ஞானமற்றவனான நீசனேனது மனத்திலே | திரு வாழ் உறந்தையாய்! | ஸ்ரீ மஹாலக்ஷ்மி வாழுமிடமான உறையூரென்னும் தலத்தில் உறைபவனே! |
| உற போந்து | பேர்க்கவும் போராதபடி யெழுந்தருளியிருந்து | சிறப்பு உடைய செல்வம் திருப்பதிகள் போல | சீரும் சிறப்பும் பொலிந்த திவ்விய தேசங்களிற்போல |
| அறம் தையா நின்ற அரங்கா! | தருமச்ரத்தையைப் பதிய வைத்தருளாநின்ற ஸ்ரீரங்கநாதனே! | இங்கு உறைந்தது ஓது | மறப்புடைய நாயேன் மனத்திலும் உறைந்தருள்வதன் காரணத்தைச் சொல்லியருள். |

* * * சோழநாட்டுத் திருப்பதிகளுள் தலையான திருவரங்கம் பெரிய கோயிலுக்கு அடுத்ததாய் உறையூரென்று ப்ரஸித்தமான திவ்ய ஸ்தலத்தை யநுபவிக்கும் பாசுரமிது. திருவுறையூரென்றே தலத்தின் திருநாமம். ஸ்ரீ மஹாலக்ஷ்மிக்கு ப்ராதான்யமுள்ள

ஸ்தலமாதலால் திருவுறையூரெனப்பட்டது. இப்பொருள் விளங்குதற்காகவே திருவாழுறந்தையாய்! என்றார். இப்பாட்டிலும் அரங்கா! என்று ஸ்ரீரங்கநாதனை விளித்தது—ஸ்ரீரங்கநாதனே அழகிய மணவாளக் கோலமாக இத்தலத்திலும் ஸேவை ஸாதித்தல் பற்றியென்க. அன்றியும், ஸகல திவ்யதேசங்களும் அரங்கனுடைய விபூதி யென்கிற தத்துவமும் உணர்த்தியவாறும். திவ்யதேசங்களில் எழுந்தருளியிருப்பதுபோல நாயினும் கடைகெட்ட அடியேனுடைய உள்ளத்திலும் எழுந்தருளியிருப்பதன் காரணத்தை யருளிச்செய்யவேணுமென்றது அறியாததொன்றை யறிவிக்கக் கேட்குங் கேள்வியன்று: 'இஃது என்ன வாத்ஸல்யம்!' என்று அந்த குணவிசேஷத்தைக் கொண்டாடிக் கூறியவாறு. எம்பெருமான் திவ்யதேசங்களிற் பண்ணியருளும் விருப்பத்தை அடியார்களின் உள்ளத்திலும் பண்ணியருள்வனென்று ஸ்ரீ வசனபூஷணத்தில் பரக்க வருளிச்செய்தது இங்கு அநுஸந்திக்கவுரியது. "அங்குத்தை வாஸம் ஸாதனம்; இங்குத்தை வாஸம் ஸாத்யம்" இத்யாதி சூர்ணிகைளை நினைப்பது. எம்பெருமான் திவ்யதேசங்களில் வஸிப்பதானது அடியார்களின் மனத்தில் வாஸம் பெறுதற்கு ஸாதநாநுஷ்டானம் பண்ணுகிறபடியென்பது பரமதாற்பரியம். மறப்புடையனாயேன் என்றவிடத்து மறப்பைச் சொன்னது இருள்துயக்குமயக்கென்கிற மற்றுமுள்ள அவத்யங்களுக்கும் உபலக்ஷணம். அடியோடு உணர்ச்சியுண்டாகாமை, உணர்ச்சியுண்டானாலும் அது நிச்சயரூபமாக வல்லாமல் ஸந்தேஹரூபமாயிருத்தல், ஸந்தேஹமன்றிக்கே திண்ணமான விபரீத வுணர்ச்சியேயாயிருத்தல், விபரீதமல்லாமல் ருஜுவான நல்லுணர்ச்சிபெற்றும் அதனை நிலைநிறுத்தி வைத்துக்கொள்ளமாட்டாமல் மறந்தொழிதல்—ஆகிய இக்குற்றங்களுக்கெல்லாம் தம்மைக் கொள்கலமாக நினைத்துக் கூறினபடி. இது ஸ்வரூபாநுரூபமான நைச்யாநுஸந்தானமென்க.

மனத்துள் அறம் வைத்தானின்ற—எம்பெருமான் அடியார்களின் மனத்தில்வாழ்வது காமக்ரோத மோஹமதமாத்ஸர்யாதிகளான தீய குணங்களைப் போக்கி, உபாயாந்தரங்களில் ருசியையும் நீக்கி ஸித்ததர்மமான தன்னிடத்திலே ருசி விச்வாஸங்களை யுண்டாக்குவதற்காகவாதலால் அதைக் கூறியவாறு. அறத்தைத் வைப்பதாவது—*ராமோ விக்ரஹவாந் தர்ம:* என்றும் *க்ருஷ்ணம் தர்மம் ஸநாதநம்* என்றும் ஸாக்ஷாத் தர்மமாகச் சொல்லப்பட்ட தன்னை விச்வஸிக்கும்படி செய்வதாம். இத்தலம் திருப்பாணாழ்வாருடைய திருவவதார ஸ்தலமென்னுஞ் சிறப்புடையது. பெரிய திருமொழி (9-2-5.) *கோழியுங் கூடலுங் கோயில்கொண்ட* என்னும் பாசுரத்தில் கோழியென்றது இத்தலமேயாதலால் திருமங்கையாழ்வாருடைய பாடல்பெற்ற ஸ்தலமிது வென்றுணர்க. ... (2)

---

அறிவிப்பு:—இந்த ஸஞ்சிகையோடு ஸ்ரீ ராமாநுஜனுக்குப் பத்தொன்பதாவது பிராயம் பூர்த்தியாய்விட்டது. சந்தா பாக்கியுள்ளவர்கள் நமது தனிக் கடிதத்தை எதிர்பாராமல் உடனேயனுப்பவேண்டியது. —மானேஜர்.

# மணவாளமாமுனிகள்

ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாயமானது ஆழ்வார்களாலும் ஆசாரியர்களாலும் பெருமையும் புனிதமும் பெற்றுப் பொலிகின்றது. இவ்வாழ்வாராசாரியர்களின் பரம்பரையானது பொய்(கை)யாழ்வார் தொடங்கிப் பொய்யிலாத மணவாளமாமுனிகளோடு தலைக்கட்டுகின்றது. இப்பெரியார்கள் நமக்குச் செய்தருளிய பேருதவிகளுக்கு நாம் செலுத்தவேண்டிய கைம்மாறு அவர்களுடைய புகழ்களை வாயாரச் சொல்லிப் போற்றுவதும் கையாரவெழுதி மகிழ்வதுமேயாம். நாமாகச் சில செய்யுள்களையோ சுலோகங்களையோ இயற்றிப் போற்றுவதிற்காட்டிலும் முன்னோர்கள் மொழிந்தவற்றைக்கொண்டு போற்றுவது மேம்பட்டதாம். ஆழ்வார்களில் நம்மாழ்வார் ஒருவர்க்குமட்டுமே மதுரகவிகள் அருளிய 'கண்ணிநுண் சிறுத்தாம்பு' என்ற துதியுள்ளது. மற்றுள்ள ஆழ்வார்களுக்கு அவரவர்களின் திவ்வியப் பிரபந்தங்கட்குத் தோன்றியுள்ள தனியன்களைத் தவிர வேறொரு துனுக்கையும் துதியாக அமைந்திலது.

இனி ஆசாரியர்களைப்பற்றிப் பேசப் புகுவோமாயின் ஸ்ரீ ராமாநுஜரொருவர் தவிர மற்றெவர்க்கும் தோத்திர நூல் அமைந்திலது. இராமாநுச நூற்றந்தாதியானது ஆசாரியரின் காலத்திலேயே அவதரித்து மேன்மை பெற்றது. யதிராஜஸப்ததி, யதிராஜவிம்சதி, யதிராஜதண்டகம் முதலானவை பிற்காலத்தில் தோன்றியவை. ஸமகாலத்தில் தோன்றிய துதி நூல் மேலே கூறிய நூற்றந்தாதி யொன்றேயாம். வடுகநம்பியென்பவர் யதிராஜ வைபவமென்றொரு வடமொழி நூல் பணித்தாரெனினும் அது சரித்திர நூலேயன்றித் தோத்திர நூலன்று. இராமாநுசர்க்கு அடுத்துள்ள எம்பார், ஆழ்வான், பட்டர், நஞ்சீயர், நம்பிள்ளை முதலான ஆசாரியர்களுக்கு ஒரு தோத்திர நூலும் திருவவதரிக்கக் கண்டிலோம். இதனால் தோத்திரம் செய்யக்கூடிய பெருமை அவ்வாசிரியர்களிடத்து இல்லையென்று நாம் சொல்லுவதாகக் கருதலாகாது. பிரகிருதம் மணவாளமாமுனிகளைப் பற்றி நாம் கூறுவதை மட்டும் குறிக்கொள்ளவேணும்.

"ஏராரு மெதிராச ரெனவுதித்தான் வாழியே" என்று வாழ்த்தப்பட்டுவருகின்ற மாமுனிகள் எம்பெருமானாருடைய அபராவதாரமாகத் தோன்றினவரென்பதில் ஐயமில்லை. இவ்வளவேயன்று; அவர்தம் அவதாரத்திற்காட்டிலும் மிக்க மேம்பாடுடையது மாமுனிகள் தம் அவதாரம். சுதந்திரமாகப் புதிய நூல்களை அருளிச்செய்வதில் விசேஷ விருப்பமற்று ஏற்கனவேயுள்ள சிறந்த நூல்களுக்கு வியாக்கியானமான நூல்களை இயற்றுவதிலேயே ஊக்கமும் ஊற்றமும் இருவர்க்கும் ஸமமானது. ஸ்ரீ பாஷ்யம், வேதாந்ததீபம், வேதாந்தஸாரம், கீதாபாஷ்யம் என்னுமிவை (ஸ்ரீ ராமாநுஜரியற்றியவை) வியாக்கியான நூல்களேயன்றோ? அப்படியே மணவாளமாமுனிகளும் "சீருலகாரியர் செய்தருள் நற்கலை தேசு பொலிந்திடு நாள்" என்கிறபடியே பிள்ளைலோகாசாரியருடையவும் அவரது திருத்தம்பியாருடையவும் அருமருந்தான திவ்விய ரஹஸ்ய நூல்களுக்கு வியாக்கியானங்களையருளிச்செய்தார். ஸ்ரீ ராமாநுஜர் வேதார்த்த ஸங்க்ரஹம், கத்யத்ரயம், நித்யம் என்கிற சுதந்திர நூல்கள் சிலவற்றையும் அருளியதுபோல மாமுனிகளும், யதிராஜவிம்சதி, உபதேச ரத்தினமாலை முதலிய சுதந்திர நூல்களும் பல இட்டருளினர். இவ்வகையாலே

இவ்வாசிரியர்களிருவர்க்கும் ஒருபுடையொப்புமை என்பது நிற்க, மாமுனிகளுக்கு ஸ்ரீ ராமாநுஜரிற்காட்டிலும் மிக்க ஏற்றமுள்ளமை கேண்மின்.

உபதேச ரத்தின மாலையில் "ஓராண் வழியாய் உபதேசித்தார் முன்னோர், ஏராரெதிசாரரின்னருளால் — பாருலகில், ஆசையுடையோர்க்கெல்லாம் ஆரியர்காள்! கூறுமென்று, பேசி வரம்பறுத்தார் பின்'' என்ற பாசுரத்தின்படி ஸ்ரீ ராமாநுஜர்க்கு ஓர் ஏற்றம் பிரசித்தமாக உள்ளது. (அதாவது) ஆளவந்தார் முதலான முன்னோர்கள் அர்த்த விசேஷங்களின் அருமைபெருமைகளைக் கண்டு மறைத்தொளித்துப் போந்தார்களென்றும், ஸ்ரீ ராமாநுஜர் அங்ஙனமன்றிக்கே பாருலகில் ஆசையுடையோர்க்கெல்லாம் கூறுமாறு கட்டளையிட்டதாகவும் காண்பதேயாம். இங்ஙனே பிறர்க்குக் கட்டளையிட்ட அப்பேராசிரியர் முன்னம் தாம் ரஹஸ்யப் பொருள்களை ஏடுபடுத்தி விளக்கியிருக்க வேண்டும். பிரமசூத்திரத்துக்குப் பல உரை நூல்களிட்டருளின ராமாநுஜர் ரஹஸ்யப் பொருள்களை விளக்கி ஒரு நூலும் பணித்திலரன்றோ? அஃது அவர்க்கு ஒரு குறையேயாகும். அக்குறையைத் தீர்த்துக் கொள்வதற்



காகவே அவ்விராமாநுஜர் தாமே மாமுனிகளாகத் திருக்கோலம் பூண்டார். இவ்வவதாரந் தன்னில் செய்தருளின காரியங்களே மிகமிகப் புகழத்தக்கவையாயின.

இப்பெருதவியின் பெருமை கண்டே மாமுனிகளுக்குப் பலபல தோத்திர நூல்களை அக்காலத்தவர்களே இட்டு வைத்தனர். வடமொழியில் ஸ்ரீமத் வரவரமுனி சதகமென்று நூறுநூறு சுலோகங்கள் கொண்ட இரண்டு துதி நூல்கள் தோன்றின. ஒன்று எறும்பியப்பா பணித்தது; மற்றொன்று அஸ்மத்குலகூடஸ்தரான பிரதிவாதி பயங்கராசாரியர் பணித்தது. அன்றியும் "பிள்ளைப்பெருமாளையங்கார் அஷ்டப்பிரபந்தங்கள்" என்னுமாபோலே, மாமுனிகளின் திருவடி பணிந்து அஷ்டதிக்கஜாசாரியர்களென்று பேர் பெற்ற எண்மர் எட்டுப் பிரபந்தங்கள் தென்மொழியில் இட்டு வைத்தனர். எறும்பியப்பா என்னுமாசிரியர் வரவரமுனி சதகமொன்றேயன்றி வரவரமுனி காவியம், வரவரமுனி சம்பூ, வரவரமுனி கர்ணாமிர்தம், அம்ருதத்வனி, தினசர்யா என்றிவை முதலான பல துதி நூல்களையும் பணித்துள்ளார். இத் துதிநூல்களெல்லாவற்றிலும் கூறப்பட்டுள்ள விஷயங்களை ஸாரமாக எடுத்துரைப்போமாயின் 'மாமுனிகளின் திருநாவீறு ஒப்பற்றது' என்பதொன்றே தேறி நிற்கும். இவர் தம் முந்தின அவதாரமான ஸ்ரீராமாநுஜரைப் பற்றின நூற்றந்தாதி முதலான துதி நூல்களை நோக்குங்கால் பிற மதத்தவர்களின் செருக்கையடக்கினரென்பது அவர் தம் பெருமையின் ஸாரமாகத் தெரியவரும். விரோதிகளை மாய்க்கும் பணி அவ்வவதாரந்தன்னில் தலைக்கட்டிற்றுதலால் மாமுனிகளான இவ்வவதாரத்தில் "முன்னவராம் நங்குரவர் மொழிகளுள்ளப் பெற்றோம் முழுது நமக்கவை பொழுதுபோக்காகப் பெற்றோம்" என்று தாமே பணித்தருளினபடி தூயவமுதைப் பருகிப் பருகிக் களிப்பதே செயலாக விருந்தது.

ஸ்ரீராமாநுஜரும் மாமுனிகளுமான இரண்டவதாரங்களையும் உற்றுநோக்குமளவில் ராமாநுஜரை ஸூரியனாகவும் மாமுனிகளைச் சந்திரனாகவும் அறுதியிடலாம். உலகத்தில் பலர் பலவகையான விருதுகளைப் பெறுவதுண்டு. பண்டிதர் என்றும், வித்வான் என்றும், வாக்மி என்றும், விசாரதர் என்றும் அவரவர்கள் பெறும் விருதுகளைக் காண்கிறோம். மாமுனிகள் பெற்ற விருது 'விசதவாக் சிகாமணிகள்' என்பது. கடல் சூழ்ந்த மண்ணுலகினுள் இந்த விருது மாமுனிகளொருவர்க்கே ஏற்கும். கூறியது கூறல், மயங்கவைத்தல், நலிந்து பொருள் கொள்ளவைத்தல், இன்னது சொல்லிற்றென்று தெரியாதபடி பேசிவைத்தல், பிறர் மனம் நோவப் பேசுதல், வீண் பேச்சுக்களை வளர்த்தல், முன்னோர் மொழிந்த முறைகளுக்கு மாறாகப் பேசுதல், முன்பின் முரண்படப் பேசுதல் முதலிய குற்றங்குறைகளை மாமுனிகளின் திவ்விய ஸூக்திகளில் இறையுங் காணவியலாது.

நம்பிள்ளையென்னுமாசிரியர் அரங்கன் ஸன்னிதியில் திருவாய்மொழியின் அரும்பெரும் பொருள்களை அனவரதமும் அருளிச்செய்து போந்தாரென்கிற பிரஸித்தியிருந்தும் அரங்கன் அவ்வாசிரியரைத் தனக்கு ஆசாரியராகக்கொள்ளவோ சிறப்புப்பாயிரமென்கிற தனியனை அவர்க்குப் பணிக்கவோ மனங்கொண்டிலன். அப்பரமன்தானே மாமுனிகள் பக்கலிலே சீடனாக இருந்து சந்திர ஸூரியர்கள் உள்ளவளவும் உலகில் ஓங்கி விளங்கி நிற்குமாறு உலகம் புகழும் தனியனொன்றை விண்ணப்பம் செய்தது மிக அற்புதம். அந்த வரலாற்றின் சுருக்கம் வருமாறு:

தென் திருவரங்கம் கோயில்கொண்ட பெருமான் மணவாள மாமுனிகளுக்குத்தான் சீடனுகி அவரைத் தனக்கு ஆசிரியராகக்கொள்ளக் குதுகலித்தனன். திருவாய்மொழிக்குச் சிறந்த வியாக்கியானமாக அமைந்த ஈடு முப்பத்தாறுயிரப்படியின் அரும்பெரும் பொருள்களை மாமுனிகளின் திருவாக்கினுல் கேட்கப்பெறவேணுமென்று ஆவல் கொண்டனன். தனது திருக்கோயிலின் திருமுன்பே எழுந்தருளியிருந்து விளம்பி யருளவேணுமென்று கட்டளையிட்டனன். அது கேட்டவுடனேயே மாமுனிகள்,

“நாமார் பெரியதிரு மண்டபமார்? நம்பெருமாள்
தாமாக வெம்மைத் தனித்தழைத்து—நீமாறன்
செந்தமிழ் வேதத்தின் செம்பொருளை நாளுமிங்கே
வந்துரையென் றேவுவதே வாய்ந்து”

என்று நைச்சியமாய் அநுஸந்தித்து மறுநாள் தொடங்கி ஓராண்டளவும் மேலே சொன்ன ஈடு முப்பத்தாறுயிரப்படியின் சீரிய பொருள்களைச் சிறப்புற விளக்கி வந்தார். அவ்வாண்டில் திருவரங்க நாதனுடைய நித்திய நைமித்திகத் திருவிழாக்களெல்லாம் நிறுத்தப்பட்டிருந்தன. ஓர் ஆனி மாதத் திருமூல நன்னுளில் இந்தப் பிரவசனம் சாத்துமுறை செய்வதாக நிச்சயிக்கப்பட்டு அது நடைபெற்று வரும்போது அரங்காநாதன் ஒரு சிறு குமாரனுய் அத்திரளிலே வந்து நின்று, “ஸ்ரீசைலேச தயாபாத்ரம் தீபக்த்யாதி குணுர்ணவம், யதீந்த்ரப்ரவணம் வந்தே ரம்யஜாமாதரம் முநிம்” என்று கைகூப்பி நின்று விண்ணப்பஞ்செய்து விரைந்து சென்று மறைந்தனன். இந்த இதிகாசத்தை மாமுனிகளின் சீடர்களென்று பிரசித்தர்களாய் அஷ்டதிக்கஜாசாரியர்களென்று வழங்கப்படுபவர்களான ஆசிரியர்கள் எண்மரும் வடமொழிச்சுலோகங்களிலும் தென்மொழிச் செய்யுள்களிலும் அமைத்துப் பாடியுள்ளார்கள். அந்நாள் தொடங்கி அரங்கநாதனது கட்டளையினுல் ஊரும்நாடுமுலகமுமெங்கும் இத்தனியனே கோவில்களிலும் மடங்களிலும் மனைகளிலும் திவ்வியப் பிரபந்தங்களோதும்போது தொடக்கத் தனியனுக விளங்கி வருகின்றது.

வியாக்கியானங்கள் அருளிச்செய்வதில் மணவாள மாமுனிகளின் திறமை ஒப்புயர்வற்றது. பிள்ளைலோகாசாரியர் என்னுமாசிரியர் ‘அஷ்டாதச ரஹஸ்யம்’ என்று பெயர் பெற்ற பதினெட்டு ரஹஸ்ய நூல்களைப் பணித்திருந்தார். அவருடைய திருத்தம்பியாரான அழகிய மணவாளப் பெருமாள் நாயனுர் ஆசார்யஹ்ருதயமென்னும் ரஹஸ்ய நூலை அருளிச்செய்திருந்தார். ஸ்ரீ வைஷ்ணவ ஸமயத்தில் உபயவேதாந்தமென வழங்கப்படுகின்ற வடமொழி தென்மொழி மறைகளின் ஆழ்ந்த கருத்துக்களை ஆர அமர ஆராய்ந்து வெளியிட்ட நூல்கள் இவற்றுக்கு மேற்பட வேறு எதுவுமில்லை. உலகாசிரியர் பணித்த பதினெட்டு ரஹஸ்யங்களுள் ஸ்ரீவசனபூஷணம், தத்துவத்திரயம், முமுக்ஷுப்படி என்ற மூன்று ரஹஸ்ய நூல்களானவை அறியவேண்டும் அர்த்தமெல்லாம் அடங்கி நிற்பனவென்றுகொண்டு இவற்றுக்கு வியாக்கியானம் அருளிச்செய்தனர் மாமுனிகள். ஆசார்ய ஹ்ருதயமென்னும் நூல் மேலே குறித்த மூன்று ரஹஸ்யங்களும் நாலாயிர திவ்வியப் பிரபந்த வியாக்கியானங்களும் சேர்ந்து ஒரு வடிவுகொண்டதென்னும்படி அமைந்ததாதலின் அதற்கும் வியாக்கியானமிட்டருளினுர் மாமுனிகள். இவர் அருளிச்செய்த நூல்கள் மற்றும் சில பல இருப்பினும் இந்நான்கு வியாக்கியான நூல்களும் நான்கு வேதங்களினும் மேம்பட்டவையென்னலாம்படி அமைந்தன.

உலகில் வியாக்கியான நூல்கள் எண்ணிறந்தவை தோன்றியுள்ளன. பெரிய வாச்சான்பிள்ளையும் வடக்குத்திருவீதிப்பிள்ளையும் திவ்வியப் பிரபந்தப் பாசுரங்கட்கு வியாக்கியானங்கள் இயற்றினார்களேயன்றி, 'ஸூத்ரங்கள்' என்னும் வகையிலே அமைந்த இத்தகைய நூல்களுக்கு வியாக்கியானம் இயற்றினவர்கள் ஸ்ரீ வைஷ்ணவ ஸமயத்தில் மாமுனிகளைத் தவிர வேறு எவ்வாசிரியருமிலர். மூலத்திற்கு அவதாரிகையிடுகிற அழகும், மூலத்தை விவரித்தருளுகிற பாங்கும், ஆங்காங்கு அர்த்தங்களைத் தொகுத்து நிகமித்தருளுகிற பண்பும், பண்டிதர்கட்கும் தோன்றமாட்டாத சங்கைகளைத் தோற்று வித்துப் பரிஹார வழிகளை உணர்த்தும் பரிசும், பிற மதங்களை மறுத்தெழுத நேர்ந்தாலும் ஒருவர் மனமும் நோவாத படிக்கும், வீணான நிந்தைகளும் பரிஹாஸங்களும் புகாத படிக்கும் எந்த இடத்தை யெடுத்தாலும் சாஸ்திர நுண் பொருள்களே கைகொள் கனியாம்படிக்கும், 'நூற்கடல்கள் எல்லாவற்றையும் கரைகண்டவர் இவர் ஒருவரே' என்று திண்ணமாக எண்ணும்படிக்கும் வியாக்கியானித்தருளினவர் மாமுனிகளொருவரே.

இவருடைய திவ்ய ஸூக்தியமுதக் கடலினின்று முக்கியமான ஒரு விசேஷத்தை முன்னம் இங்கெடுத்துக் காட்டுவோம். மாமுனிகள் தாம் ஆங்காங்கு மூலத்திற்குச் சேர விவரித்து அருளிச்செய்யும் அர்த்த விசேஷங்கள் வேறு சில ஆசிரியர்களின் நூல்களிலு மிருந்தால் அவ்விடங்களை எடுத்துக் காட்டி யருளாதொழியார். இந்த நடை பிற ஆசிரியர்களின் நூல்களிற் காணவரிது; 'சிலர் இப்படி உரைப்பர்; சிலர் இங்ஙனே கூறுவர்' என்று லகுவாகக் காட்டிப் போவார்களேயன்றிப் பெயரையும் இடத்தையும் வாசகங் களையும் காட்டவே மாட்டார்கள். மாமுனிகளின் வியாக்கியான நடை இத்தகையதன்று. 'இன்ன ஆசிரியர் இன்னவிடத்திலே இன்னபடி கூறியுள்ளார்; அவரது வாசகங்கள் இவை' என்று மிக விளக்கங் காட்டியே தீருவர். இது மாமுனிகளின் திவ்யஸூக்திகளுக்கு உண்டான தனிச்சிறப்பு. இது காரணமாகவே, "பொய்யிலாத மணவாள மாமுனி புந்தி வாழி" என்று உலகப் பிரசித்தமான வாழ்த்து அமைந்தது.

வைணவ சமயக் குரவர்களில் வடமொழியிலும் தென்மொழியிலும் சிறியனவும் பெரியனவுமாக நூல்கள் இயற்றினவர்கள் [ஆழ்வார்களைத் தவிர] ஏறக்குறைய இருபதின்மர் (உலகம் போற்ற நின்ற ஆசிரியர்கள்) மாமுனிகளுக்கு முற்பட்டவர்கள் தேறுவர்கள். அத்தனைபேருடையவும் நூல்களிலிருந்து, உரிய இடங்களில் உயரிய வசனங்களை எடுத்து மேற்கோள் கொடுத்திருக்கும் அழகு அற்புதமானது. இதற்குமேல் மற்றோர் அதிசயம்—மேற்கோள்களை எடுத்துக்காட்டிவிட்டு 'என்கிறபடியே' என்று போய்விடாமல் அவற்றின் பொருளைத் தெரிந்துகொள்வதற்கு வேறு வியாக்கியானங்களைத் தேடவேண்டாமல், அவ்விடங்களில் தமக்கே உரிய நடையில் விவரணமுங் காட்டி யருள்வது மிகப்பெரிய மாண்பு. 'ஆழ்ந்து கூர்ந்து ஆராய்தல்' என்னும் முறையிலே மாமுனிகளின் வியாக்கியானத் திருவாக்குகளை நோக்குங்கால், இராமபிரான் மாருதியின் இனிய சில மொழிகளைக் கேட்டதும் இளையோனை நோக்கிக் கூறியதாகக் கம்பர்பெருமான் பாடியுள்ள,

2

"இல்லாதவுலகத் தெங்கு மீங்கிவனிசைகள் கூரக்
கல்லாத கலையும் வேதக்கடலுமே யென்னுங்காட்சி
சொல்லாலே தோன்றிற்றன்றே ஆர்கொலிச் சொல்லின்செல்வன்
வில்லார்தோள் இளையவீர விரிஞ்சனோ விடைவலானோ?"

என்னுஞ் செய்யுளே நினைவுக்குவரும். இக்காலத்தில் இதிஹாஸபுராண பாஞ்சராத்திரம் முதலிய எல்லா நூல்களும் பல லிபிகளில் பல முறைகளில் பலவகை அட்டவணைகளுடனும் அச்சேறியுள்ளன. இஃது ஒரு நூற்றாண்டுக்கு உட்பட்ட செய்தி. ஆசிரியர் காலத்தில் ஓலையேடு தவிர வேறு கிடையாது. அதுவும் ஓரூரில் ஒன்றிரண்டு சுவடிகளுக்கு மேல் காண்பதரிது. எந்த மூலையில் எந்த விஷயமுள்ளதென்று கண்டறிவதற்கும் இயலாது. இத்தகைய நிலையில் மாமுனிகள் இதிஹாஸபுராண ஸ்ரீ பாஷ்யாதிகளான வடமொழி நூல்கள் பலவற்றிலுமிருந்து ஆயிரத்து எழுநூற்று எழுபத்தெட்டு வசனங்களை மேற்கோளாக எடுத்துக்காட்டியுள்ளார் என்று நாம் ஏற்றக்குறைவின்றிக் கணக்கெடுத்து வெளியிட்டிருப்பது உலகம் பரவியுள்ளது. இஃதொன்றைமட்டும் நோக்குங்கால், ஆளவந்தாரென்ற ஆசிரியரால் "ப்ரக்ருஷ்டவிஜ்ஞான பலைகதாமநி" என்று போற்றப்பட்ட ஆதிசேஷனே மாமுனிகளாகத் திருவவதரித்தனரென்று மேலையார் கூறியுள்ளது மிகப் பொருத்தமென்றுணரலாகும்.

மாமுனிகளின் மாண்பைச் சுருங்கச் சொல்லில் தாம் இயற்றியருளின நூல்களுள் ஒன்றான ஆர்த்திப் பிரபந்தத்தில் (பா—28) "பண்டு பலவாரியரும் பாருலகோருய்யப் பரிவுடனே செய்தருளும் பல்கலைகள் தம்மை, கண்டதெல்லாமெழுதியவை கற்றறிந்தும் பிறர்க்குக் காதலுடன் கற்பித்துங் காலத்தைக் கழித்தேன்" என்று தாமே யருளிச்செய்தபடி ஏற்கனவே தோன்றியுள்ள பூருவர்களின் பொன்மொழிகளைப் பிரவசனஞ் செய்தருள்வதிலேயே மிகுந்த காதலுடையராயிருந்தும், இவ்வுலகின் பாக்கிய பரிபாகமடியாக சிஷ்யர்களின் வேண்டுகோளுக்கிணங்கியும் எம்பிரானது கட்டளையை முன்னிட்டும் தேனும் பாலும் கன்னலும் அமுதுமான திவ்விய நூல்களையுமிட்டருளிக் கலியுகத்தைக் கிதயுகமாக்கி எழுபத்து மூன்றாண்டுகள் இந்நிலவுலகத்தில் வாழ்ந்து நலமந்தமில்லதோர் நாடு புகுந்தனரென்பதாம்.

நம்மாழ்வார் திருவாய்மொழியில் *துவளில் மாமணி மாடமோங்கு* *உண்ணுஞ் சோறு பருகுநீர்* முதலான சில பதிகங்களில் தம்முடைய பெருமையைத் தாமே வெளியிட்டுக் கொண்டவாறுபோல மாமுனிகள் தாமும் ஆர்த்திப் பிரபந்தத்திலே,

"தென்னரங்கர் சீரருளுக்கிலக்காகப் பெற்றோம்; திருவரங்கந் திருப்பதியே யிருப்பாகப் பெற்றோம்; மன்னியசீர் மாறன்கலை யுணவாகப் பெற்றோம்; மதுரகவி சொற்படியே நிலையாகப் பெற்றோம்; முன்னவராம் நங்குரவர் மொழிகளுள்ளப் பெற்றோம்; முழுது நமக்கவை பொழுது போக்காகப் பெற்றோம்; பின்னையொன்றுதனில் நெஞ்சுபோமற் பெற்றோம்; பிறர் மினுக்கம் பொறாமையிலாப் பெருமையும் பெற்றோமே"

என்று அருளிச்செய்த பாசுரத்தையே நிச்சலும் சிந்தனை செய்து உய்வோமாக.

# வைபவ-உபஸம்ஹாரம்

மாமுனிகளின் திவ்யஸூக்திகளை மாச்சரியத்தினால் அநுபவிக்கப்பெறுதவர்கள் கிடக்கட்டும். அப்ரமேய பாக்யவசத்தாலே அவற்றை யநுபவிக்கப் பிறந்தவர்களுங்கூட ஆழ்ந்துநோக்கி யநுபவிக்கப்பெறுதார் பலருளரென்பது அடியேனுடைய அநுபவத்தில் கண்டவிஷயம். ப்ரக்ருதம் ஒரே விஷயம் ஸ்தாலீபுலாகந்யாயேந காட்டிநிற்கிறேன். ஸ்ரீவசநபூஷணத்தில் (96.) "ஆத்ம குணங்களில் ப்ரதாநம் சமமும் தமமும்" என்பதொரு சூர்ணிகை. இவ்விடத்து வியாக்கியானத்தில் மணவாளமாமுனிகள் "சமமாவது அந்த: கரண நியமநம்; தமமாவது பாஹ்யகரண நியமநம்" என்றருளிச்செய்து, இதற்கு ப்ரமாணங் காட்டியருளத் திருவுள்ளம்பற்றி "*சமச் சித்தப்ரசாந்திஸ் ஸ்யாத் தமச் சேந்த்ரிய நிக்ரஹ:* என்னக்கடவதிறே" என்று ஒரு ப்ரமாணம் காட்டி, உடனே பூர்வாசார்ய ஸ்ரீஸூக்தி யையும் காட்டவேண்டி "*க்ஷமா ஸத்யம் தமச் சம:* என்கிறவிடத்தில் 'தமோ பாஹ்ய கரணாநாம் அநர்த்த விஷயேப்யோ நியமநம்; சம:—அந்த: கரணஸ்ய ததா நியமநம்' என்றிறே பாஷ்யகாரருமருளிச் செய்தது." என்று கீதாபாஷ்ய ஸூக்தியை யெடுத்துக் காட்டியருளினர். இவ்வளவோடு நில்லாமல் அடுத்தபடியாக "மாறிச் சொல்லுமிடமு முண்டு" என்றருளிச்செய்தார். அதன் கருத்து என்னவென்றால், பாஹ்யகரணாநாம் நியமநம் தம:, அந்த: கரணநியமநம் சம: என்று இப்படியே கொள்ளவேணுமென்கிற நிர்ப்பந்தமில்லை; அந்த: கரண நியமநம் தம:, பாஹ்யகரண நியமநம் சம: என்று கொள்ளுவதுமுண்டு என்பதாம். கீழே இரண்டு ப்ரமாணங்களைத் தாமே யெடுத்துக் காட்டிவிட்டு அவற்றோடு ஸம்பந்தப்படாதபடி "மாறிச் சொல்லுமிடமுமுண்டு" என்று அருளிச்செய்வது மணவாளமாமுனிகளின் இயல்புக்குச் சேராது; அப்படியிருக்க எங்ஙனே யருளிச்செய்தாரென்று விமர்சிக்க ப்ராப்தம். மேலேகாட்டின ஸ்ரீஸூக்தியில் "மாறிச் சொல்லுவதுமுண்டு" என்னுமல் "மாறிச் சொல்லுமிடமுமுண்டு" என்று ஸாதித்திருக்கை யாலும், அதுதானும் கீதாபாஷ்ய ஸ்ரீஸூக்தியை உதாஹரித்தவுடனே ஸாதித்திருக்கை யாலும் பாஷ்யகாரரான ஸ்வாமியே மற்றோரிடத்தில் மாறிச் சொல்லியிருக்கிறுரென்று தெரிவிக்கப்பட்டதாகிறது. அப்படி ஓரிடத்தைத் தாம் காணுமல் அந்த ஸ்ரீஸூக்தியை ஒருகாலும் அருளிச்செய்யமாட்டார் மாமுனிகளென்பது ஸத்யம். இதுபற்றியேயன்றோ "பொய்யிலாத மணவாளமாமுனி புந்திவாழி" என்று உலகமெல்லாம் வாழ்த்திப் போருவது.

கேண்மின்; அந்த கீதாபாஷ்யத்திலேயே ஸ்வாமி தாமே மாறிச் சொல்லியுள்ளார்; (அதாவது)—பதினாறுமத்யாயத்தில் முதல் சுலோகத்தில் 'தாநம் தமச் ச யஜ்ஞச் ச" என்றும், இரண்டாம் சுலோகத்தில் "த்யாகச் சாந்தி: அபைசுநம்" என்றும் வருகிறது. அங்கும் தம சமங்களுக்கு விவரணமுள்ளது. கீழே காட்டின விவரணம் பத்தாமத்யா யத்தில் நான்காவது சுலோகத்தின் பாஷ்யத்திலுள்ளது. (16—1, 2ல்) காணும் விவரணம் அதனில் வேறுபட்டது. அந்த: கரண நியமனத்தை தமமாகவும், பாஹ்ய கரண நியமனத்தை சமமாகவும் இங்கு பாஷ்யகாரர் அருளிச்செய்துள்ளார். அவரும் ஸ்வோக்தி விருத்தமாகவருளிச்செய்பவரல்லர். இரண்டு படியையும் அவர் ப்ரமாணஸித்தமாகக் கண்டவராகையாலே ஒரு படியை ஓரிடத்திலும் மற்றொரு படியை மற்றோரிடத்திலும்

அருளிச்செய்தார். மணவாளமாமுனிகள் அவருடைய புநரவதாரபூதராதலால் இரண்டு படியும் தமக்கு ஹ்ருத்கதமாயிருக்கையாலே "மாறிச் சொல்லுமிடமுமுண்டு" என்றருளிச் செய்தாராயிற்று.

இங்ஙனே நிற்க. தேசிகனருளிச்செய்த தாத்பர்ய சந்த்ரிகையில் மேலேயெடுத்துக் காட்டிய பதினொருமத்யாய ஸ்தலத்தில்—"ஏதேந கேஷாஞ்சித் அநயோச் சப்தயோர் வ்யுத்க்ரமேண அர்த்த வ்யாக்க்யாநம் நிரஸ்தம்" என்கிற பங்க்தி காணப்படுகிறது. மணவாளமாமுனிகள் தேசிகனுடைய காலத்திற்குப் பிற்பட்டவராகையாலே மாமுனிகளின் ஸ்ரீஸூக்திக்கு மறுப்பாக அது அருளிச்செய்ததென்று கொள்வதற்கு அவகாசலேசமுமில்லை. வேறு யாருடைய உக்திக்கு மறுப்பென்று விமர்சிக்குமளவில் சங்கர பாஷ்யத்திற்கு மறுப்பென்று ஸ்பஷ்டமாக விளங்காநின்றது. ஆனால் நம் பாஷ்யகாருடைய ஸ்ரீஸூக்திக்கும் மறுப்பாகத் தேறுகிறது. வ்யுத்க்ரமேண அர்த்த வ்யாக்க்யானம் பண்ணியருளினவர் நம் பாஷ்யகாரருமாதலால் அவருடைய வியாக்கியானத்தை நிரஸ்தமென்று தேசிகன் நெஞ்சாலும் நினைக்க ப்ரஸக்தியில்லையாகையாலே இது ப்ராமாதிகமென்னவேணும்.

பத்தாவது அத்யாயத்தில் பாஷ்ய ஸ்ரீஸூக்தியிருக்கும்படியையும், அங்கு சந்த்ரிகையில் தாம் விசேஷித்து அருளிச்செய்தபடியையும் மறக்கவல்லவரன்றே தேசிகன். சமம் தமம் என்று இரண்டுபதம் வேண்டியதில்லை; அந்யதர பதமிருந்தாலும் அதற்கே பாஹ்ய ஆந்தரகரண நியமனத்தைப் பொருளாகக் கொள்ளமுடியும். ஆனாலும் தனித்தனி இரண்டு பதங்களிருப்பது வீணாகாதபடிக்கு அர்த்தபேதம் காட்டுவது யுக்தம் என்று திருவுள்ளம்பற்றி "………பௌநருக்த்ய பரிஹாராய விஷயபேதே வக்தவ்யே நியமந க்ரமேண தமசமயோ: பாஹ்யாந்தரகரண விஷயத்வோக்தி:" என்று சந்த்ரிகையில் ஸாதித்திருப்பதனால் இதற்கும் சேராதபடியன்றோ பதினொருமத்யாயத்தில் சந்த்ரிகை அவதரித்துள்ளது. அன்றியும் "ஏதேந, வ்யுத்க்ரமேண கேஷாஞ்சித் வ்யாக்க்யாநம் நிரஸ்தம்" என்கிற பங்க்தியும் சிறிது பராமர்சிக்கத்தக்கது. ஏதேந என்பதற்கு 'பாஷ்யகாரர் இப்படியருளிச்செய்திருக்கையாலே' என்று தானே பொருளாகும். நம்முடைய பாஷ்யகாரர் ஸாதித்ததனாலே சங்கரபாஷ்யம் எப்படி நிரஸ்தமாகும். இது மஹா ப்ராஜ்ஞர்கள் விமர்சிக்கவேண்டிய விஷயமென்று விட்டுவிடுகிறேன். மணவாளமாமுனிகளின் பரம ப்ராமாணிகத்வ நிருபணம் மட்டுமே இங்கு அடியேனுக்கு உத்திஷ்டம். … ❁

(வெண்பா.)

மன்னு புகழ்சேர் மணவாள மாமுனிவன்
தன்னருளே தஞ்சமெனத் தாங்கொண்ட—மின்னுபுகழ்
வேதியர்கள் தாளன்றி வேறொன் றறியாதார்
மேதினியில் விண்ணவர்க்கும் மேல்.

# TIRUPPAVAI & TIRUVEMBAVAI

Sri Kanchi P. B. Annangaracharya.
( Translator Sri T. A. Sampath Kumaracharya M. A. )

Tiruppavai is a devotional song consisting of thirty singularly beautiful Tamil hymns, sung in praise of Lord Vishnu, incarnated as Sri Krishna. Its authoress is Andal or Goda-devi, who was, actually Lord Vishnu's divine consort, Bhudevi, incarnated as the foster daughter of the great Tamil Saint, poet and philosopher Sri Vishnuchitta, also called Periyazhwar and Bhattanatha, who flourished in Srivilliputtur (Ramnad District) more than a thousand and five hundred years ago. Tiruvembavai is a similar Tamil work containing twenty verses in praise of Siva, composed by a Saiva poet, called Manicka-vachakar.

Certain people have taken the fancy to popularise the Thiruvembavai and have hit upon a very clear way of doing so. Having seen that the Tiruppavai is very popular among the Sri Vaishnavas, they have arrived at the conclusion that their Pavai can be popularised only by introducing it to the public along with Tiruppavai. So they have begun holding Tiruppavai - Tiruvembavai conferences and advising the public at large to learn both the works, recite them ceremoniously and so on. These conferences are being held in many public places, including Siva and Vishnu Temples, throughout Tamil Nad, round about the month of Margali. On the face of it, the idea looks not merely harmless, but also laudable, because it aims after all, at propagating the above-mentioned devotional works. It prevents the spread of atheism in the first place and lessens Saiva-Vaishnava tension. So, it is argued, no sane person, be he a Saivite or Vaishnavite, can raise any objection to the holding of such conferences. The H. R. E. Board has taken much interest in this matter, which, by-the-by is out of its jurisdiction, and has been asking—rather compelling—the Devasthanams under its control to conduct such conferences, under their auspices, of course spending big sums of money out of the Temple funds. Thus, these seemingly innocent conferences are going on for the last so many years, without any hindrance.

Nevertheless, the Sri Vaishnavas have felt that such conferences only bring discredit to their beloved Tiruppavai, by placing it on a level with the other Pavai. So, many people have been raising their objections against holding them; but their voice has been lost in the din of official propaganda

Of course, the Sri Vaishnavas can have no objection to the propagation of either of the Pavais, if it is carried on on proper lines. But, what pains them is that people are taking to the highly objectionable path of clubbing the two together and placing them on the same pedestal, which ought not to be done. We shall now explain this point, clearly.

The Tiruppavai has been looked upon with the greatest respect by all the Sri Vaishnavas, because it contains, in a nut-shell, the essence of the teaching of all the Vedas, put together. It being a general rule that every Sri Vaishnava should learn and recite it at the time of his daily puja, there can hardly be found a Sri Vaishnava, worth the name, who does not know it. In fact, our Acharyas have held that he, who does not know the thirty hymns af Andal, (i. e. the Tiruppavai) is verily a burden to the earth. They would not even drink water out of such a person's hand. No puja, be it a routine or special one, can be properly done without the recital of these sacred hymns. Tiruppavai Sathumurai or the formal conclusion of the ceremonial recitation of Tiruppavai is an integral part of the daily and special pujas conducted in individual houses, mutts and public Sri Vaishnava Temples. As such, it is clear that Tiruppavai is considered by Sri Vaishnavas as the holiest text. But, what about the Thiruvembavai?

Every Sri Vaishnava is proud to bear the title of Ubhaya-Vedanta-Pravartaka (or shortly U. Ve.). The Ubhaya Vedantas mentioned here are, the Sanskrit Vedanta, the Upanishads and connected works and the Tamil Vedanta, or the collection of the sacred 4000 hymns, composed by the mystic saints, called Alwars. It is a well established fact that one can derive divine wisdom, which leads to the realisation of the soul and the Lord, and to final salvation only from a deep study of the Vedas. (the Vedanta forming an integral part of them). Now, according to the great Sri Vaishnava Acharyas, the Vedas are two-fold—Sanskrit and Tamil. The former are well-known and the latter consist of the 4000 verses forming the Divya Prabandhas, already referred to. These Divya Prabandhas are the out-pouring of the divine Alwars, who were submerged in divine love (or devotion), as a result of which, they had direct perception of the Lord. Therefore these sayings give us a first-hand information about the Lord, in all His varied aspects. Because of this, they are considerd to be of greater value than the Sanskrit Vedas, in imparting divine knowledge.

Sriman Nathamuni was a great scholar well-versed in all the Vedas and Vedangas. He was, more-over, a Yogi, a master of Ashtanga Yoga, which is considered to be the right royal road to self-perception, on which subject, he is reputed to have written a thesis called Yoga-rahasya. But, not being satisfied with this unique qualification, he performed rigorous penance and on percieving Saint Nammalwar, asked for the boon of being taught the Divya Prabandhas. He then spent the whole of his life in the study and propagation of this sacred literature. He is called Dravida-Veda-Vyasa because he codified the Divya Prabandhas, divided them into four sections, each being called a Thousand, set up on order for the individual works and channelised their recitation in Temples and private places of worship.

His grandson Sri Yamunacharya, was perhaps a greater scholar than him. It is said that he had mastered all the Sanskrit Sastras—the Vedas, Vedanta, Vedangas etc,—at a tender age, and vanquised in argument, a great pandit of his day at the king's court, thereby winning, as a present, a kingdom. But when after a time he learnt the Divya Prabandhas, he renounced his kingdom, became an ascetic, and spent the whole of his life in studying and propagating the wonderful teachings contained in them. The later Acharyas quote, in their works, beautiful interpretations of Sri Yamunacharya upon many passages of the Divya Prabandhas. He is the proud author of several precious Sanskrit works; but his Stotras are full of beautiful ideas culled from the Divya Prabandhas.

Sri Ramanujacharya, the greatest of Sri Vaishnava Acharyas, whose name is associated with Visisthadwaita Vedanta, it being called Sri Ramanuja's system of Vedanta or Philosophy, was a great scholar, who possessed an unfathomable Knowledge of all Sanskrit Sastras. He wrote the famous Sri Bhashya, Gita Bhasya, Vedartha Sangraha and other works. But his love for and devotion to the Divya Prabandhas, and particularly Tiruppavai is indeed unimaginable. He was called Tiruppavai Jeeyar, because he always chanted it and meditated upon its manifold meanings. It was he that ordered that the recital of the Divya Prabandhas should form an integral part of worship at each and every individual house of Sri Vaishnavas and at public places of worship, such as mutts and Temples. He held regular lecture classes on them, caused a commentary to be written upon the Sahasragiti (Tiruvoimozhi) and ordered his disciples to get them by heart.

The long line of his illustrious successors, like Sri Kurathalwar, Sri Parasara Bhattar, Sri Nanjeeyar, Nambillai, Periavachanpillai, Vedakkutiru-veedipillai, Pillai Lokacharya, Vedantacharya, Manavala Mamunigal, etc., were likewise, all great Sanskrit Scholars, who had dived deep in the ocean of Vedic and allied literature and written several volumes in Sanskrit. But, they spent the greater part of their life in the study and teaching of the Divya Prabandhas. They (Sriman Nathamunigal and Sri Ramanuja in particular), have laid down definite rules regarding the mode of conducting recitation of the Divya Prabandhas, i. e., recitation of particular portions thereof on particular occasions, it being physically impossible to recite all the 4000 verses at a single time. They made detailed arrangements to recite the whole text during the famous Adhyayana - Utsava, which they divided into three parts, viz., Pagal - pattu, Ira - pattu and Iyarpa tirunal. Even anadhyayanam days, when these Prabandhams ought not to be recited, have been fixed up by them, bringing them on par with the Sanskrit vedas. Rightly has Kamban, the great Tamil poet of Ramayana fame, sung in his "Satagopar Andadi", "What would have the Sri Vaishnavite Brahmins and their many festivals, in temples, been worth for, had not Saint Nammalwar sung his Tamil Veda?" This definitely shows that the Divya Prabandhas sung by Saint Nammalwar aud others, were called Tamil Veda and were being ceremoniously sung during the festivals by Vaidika Brahmanas.

As already stated above, these Acharyas were not laymen who, being ignorant of Sanskrit and Vedic literature, turned as an alternative to the Tamil songs to satisfy their internal urge to know something about the Supreme Being. On the other hand, they were thorough masters of all Sanskrit Sastras; but yet they devoted their attention to the Tamil Divya Prabandhas because of their intrinsic value and took just pride as their exponents. They felt that their knowledge of the Sanskrit Vedanta was incomplete unless and until it was supplemented by a study of the Divya Prabandhas. This has been the case ever since the time of Sriman Nathamunigal, who adored this land of ours some 1200 years ago. Among the Divya Prabandhas, the divine Tiruppavai occupies the place of pride, because our Acharyas have held that all the other works comprising the Divya Prabandhas, put together cannot equal it in merit. Other hymns are sung on particular occasions only; but the thirty verses of Andal (i. e. Tiruppavai) have to be sung daily. In addition, the whole month of Margali is specially reserved to sing it, listen to its teachings and

worship it along with its authoress. Special festivals are held in its honour. Our Acharyas have written several glosses and commentaries upon it. Thus it is clear that these pious hymns are held in the highest respect by the greatest scholars. Even North-Indian Sri Vaishnavas, who are ignorant of Tamil and cannot even pronounce the Tamil alphabet properly, long to own the title of Ubhayavedanta Acharya. They have the greatest respect towards the Divya Prabandhas, and some of them have got by heart, certain select hymns and recite them during their daily Pujas. They have got printed Tiruppavai and certain other hymns in Devanagari Script and studied Sanskrit and Hindi commentaries upon them. It is, of course, needless to say that the majority of Sri Vaishnavas of Andhra Pradesh study these works, which are, for their sake, printed in Telugu characters. Many commentaries have been written and published in the Telugu Language also.

In short, the Sri Vaishnavas are proud of possessing the blessed divine trio—the Divya Suris, Divya Prabandhas and Divya Desams. The word, Divya Suris, denotes the Alwars, who are the authors of the Divya Prabandhas, (i. e. the divine literature). The Divya Desams are the divine, sacred temples, which have been praised by the Alwars. The Sanskrit Sastras proclaim that that Sampradaya is the genuine one, wherein the trio—pramana, prameya and pramata, i. e. the means of knowledge the thing (or entities) discussed (or known by those means) and the person, who does the said discussion—are all Satvic. In the Srivaishnava Sampradaya, all the above-mentioned ones are Divya or Divine, as their very name suggests. Therefore it can be seen that the greatness of the Sri Vaishnava Sampradaya and their temples is, in a very large measure due to their connection with the Divya Suris and their Divya Prabandhams. Not only this; Saint Nammalwar, the most important among the Alwars, has been included in the Sri Vaishnava Gurparampara (the line of Acharyas) which runs thus—(1) Lord Narayana, (2) His consort, Lakshmi, (3) Vishvaksena, the Commander-in-chief, (4) Nammalvar, (5) Sriman Nathamunigal and so on. Every Sri Vaishnava, without a single exception, worships this Guru parampara.

If we now turn our eyes towards the Tiruvembavai, we find that it cuts a very poor figure besides Tiruppavai. No Vaidik scholar has ever cared to study or even take a glance at it. Even the Adwaiti or Saivamargi Brahmanas pay little respect to it, the majority of them being ignorant of

its very existence. The question of singing it ceremoniously, either in their houses or Mutts, has never arisen so far, and will never arise, in future. No Vedic scholar has written any gloss upon it. Only a small section of Tamil Scholars, who do not study the Sanskrit Vedas and Sastras, take some interest in it. Within the present decade or so, some people read it along with other Tevarams. in Siva Temples during festivals. But then, it does not form a part of the puja, as such. No Vaidika is prepared to recite it himself or allow others to do so, along with the Vedas, either at his residence or in Mutts, durig the hours of Puja. No Scholar worth the name can even dream of augmenting his Vedic knowledge by studying these Tamil works. Therefore it is clear as day light, that the Tiruvembavai cannot command even a tiny fraction of the respect that Tiruppavai does. Moreover, while the Tiruppavai is satisfied with singing the glory of lord Narayana, without speaking ill of other deities, the Tiruvembavai often speaks of Narayana as an inferior deity. Under these cirumstances, no Sri Vaishnava can tolerate these Pavai Conferences which place the two unequal Pavais on the same level. They rightly smell in it a sinister motive of the organizers to degrade the Tiruppavai and the Deity praised by it, by clubbing it with the far inferior Pavai, which has no followers and tries to belittle Lord Vishnu. Again how can they tolerate Andal's idol (or photo) being taken in procession along with that of Manicka-vachakar, an ordinary mortal, while the former is an incarnation of Goddess Bhu-devi ?

As already stated. no Sri Vaishnava ever cares to grudge any effort that might be made by others to propagate their own pavai. But, let them keep clear of Sri Vaishnava Temples and such other public places; let them not mix it up with Tiruppavai, in any way. Let them confine their activities to their own individual houses (or their temples, if the authorities permit them to do so). It is neither necessary nor proper for them to discredit and pollute Sri Vaishnava scriptures and institutions by mixing them up with undesirable elements.



# சென்னை முத்தியாலுபேட்டை ஸ்ரீ வேணுகோபாலக்ருஷ்ணஸ்வாமி தேவஸ்தான வைபவம்.

## முகவுரை

ச்ரிய: பதியான ஸர்வேச்வரன் ஒருத்திமகனாய்ப் பிறந்து ஒருத்திமகனாய் வளர்ந்து துஷ்டநிக்ரஹ சிஷ்டபரிபாலனம் செய்தது துவாபரயுகத்தில். இக்கலியுகத்திலோ நம்போல்வார் உஜ்ஜீவிக்கும் வண்ணம் அர்ச்சாரூபியாய்ப் பல திவ்ய க்ஷேத்திரங்களில் கோயில்கொண்டு தன் வடிவழகைக் காட்டி யீடுபடுத்தியருளுகிறான்.

## மேலேகுறித்த ஸந்நிதியின் ஸந்நிவேசம்

சென்னைமாநகரின்கண் நடுநாயகமாய் பவழக்கார வீதியில் விளங்கும் ஸ்ரீக்ருஷ்ணன் கோயிலில் ஸ்ரீ வேணுகோபாலனாக ஸேவை ஸாதிக்கும் கண்ணபிரான் நின்ற திருக்கோலத்தில் வலது பாரிசத்திலிருந்து ஸ்ரீருக்மிணித் தாயாரும் இடது பாரிசத்திலிருந்து பூமிப்பிராட்டியும் தனித்தனி ஸந்நிதியிலிருந்து அருள்வீசு கீழ்த்திசை நோக்கிக் குழலூதி பக்தர்களை அழைக்கிறான். தவிர, ஸ்ரீராமன், ஸ்ரீநிவாஸன், ஆழ்வார்—ஆசார்யாள், பெரிய திருவடி, சிறிய திருவடி முதலியவர்களுக்கும் ப்ரத்யேக ஸந்நிதிகள் உண்டு. பின்புறம் புஷ்கரிணியும் வாகனமண்டபமும், முன்புறம் திருமடப்பள்ளியும் நன்னீர்க் கிணறும் உள. இப்படிப்பட்ட தேவஸ்தானம் சுமார் 400 வருஷங்களுக்குமுன் ஸ்தாபிக்கப்பட்டதாகத் தெரியவருகிறது. பூவிருந்தவல்லிக்கடுத்த திருமழிசை க்ஷேத்திரத்து திருமழிசைப்பிரான் நம் கண்ணன் ஸந்நிதியிலேயே பல வருஷங்கள் எழுந்தருளி இருந்து மங்களாசாஸநம் செய்ததாக ஐதிஹ்யம்.

## திருப்பணிக்கமிட்டி நிறுவல்

இவ்வித விலக்ஷணவைபவம் பொருந்திய வேணுகான வாசுதேவனின் ஆஸ்தான வாயிலில் ராஜகோபுரம் இல்லாதிருந்ததினால் அப்பேட்டை வாசிகளுக்குப் பலவருஷங்களாக இருந்த பெருங்குறை நீங்கும்நேரம் மூன்று வருஷங்களுக்குமுன் கண்ணன் க்ருபையால் கிட்டியது. உடனே ஐந்து ப்ரமுகர்கள்கூடி ஒரு கமிட்டி ஸ்தாபித்து ரிஜிஸ்தர் செய்துகொண்டு, அவர்கள் ஒவ்வொருவரும் ரூ. 1001/- முன்பணமாக நன்கொடையாகப் போட்டுக்கொண்டு, ஸ்ரீஉ.வே. வித்வான் காரப்பங்காடு ஸ்வாமி "கைங்கர்யம்" என்னும் விஷயமாய் உபந்யஸித்த விஷயங்களை ச்ரவணம் செய்த உற்சாகத்துடன் திருப்பணியில் ஈடுபட்டார்கள்.

## பாலாலய உற்சவம்

முதற்கண் அங்கமாக 'பாலாலய' உற்சவம் 16—6—1964 முதல் மூன்று நாட்கள் பல வைதிகோத்தமர்களைக்கொண்டு கிரமப்படி வெகுவிமரிசையாக கமிட்டியார் நடத்தினார்கள். அதுமுதல் இடைவிடாமல் ராஜகோபுர நிர்மாண திருப்பணியுடன் ஜீர்ணித்துக்கிடந்த விமானங்களை புதுப்பிக்கும் பணியும் நடைபெறலாயின. மாம்பலம்

★

திரு. K. R. ராமநுஜ ஸ்தபதியும் அவரிட குழுவினரும் சிற்பவேலைகளை திறம்பட செய்து வந்தனர். தேவஸ்தான தர்மகர்த்தாக்களும் மேற்படி கமிட்டியின் அங்கத்தினராக அமைந்தமையாலும், இதர ஆஸ்திகர் பலர் ஆர்வத்துடன் ஸேவைபுரிந்து வந்ததினாலும் பல்வேறு கைங்கரியங்கள் ஒருமித்து துரிதமாகவும் ஒத்துமையாயும் நடைபெற்றன.

## காரியதரிசிகளின் சாதனை



பூராகைங்கரியங்களின் சகல பொறுப்புக்களையும் சிரமத்தையும் சலிப்பில்லாமல் ஏற்றுக்கொண்டு, ஒவ்வொரு வேலையையும் செவ்வனே செய்து முடிக்கவேண்டுமென்ற நோக்கத்துடன் தங்களுடைய சுய அலுவல்களை இரண்டாவதாகப் பாவித்து, பல கனதனவான்களை அணுகி சிறிது சிறிதாகத் திரவியமும், சாமான்களும் சேகரித்து, முன்பணமும் போட்டுப் பூர்த்திசெய்த பெருமை துணைக் காரியதரிசிகளையே சாரும். வைதிக காரியங்களையும் சாஸ்திரோக்தமான விஷயங்களையும் அவ்வப்போதைக்கு கவனித்துவந்தவர் ஸ்ரீமதுபயவே. வித்வான் ஸ்ரீ K. வரதாச்சார்ய ஸ்வாமி. இதர எல்லா வேலைகளையும் தகுந்தவர்களைக்கொண்டு தன் நேர்பார்வையில் நடத்திவந்தவர் அட்வகேட் ஸ்ரீ P. B. அனந்தாச்சாரியர் ஸ்வாமி. அவரது ஆற்றலை மெச்சி முடிவில் அன்னருக்கு தேவஸ்தானத்தில் பொன்னடை போர்த்தி கௌரவித்ததை இங்குள்ள புகைப்படத்தில் காண்க. மேற்படி துணைக் காரியதரிசிகள் இருவரும் ஸந்நிதி ஸம்புரோக்ஷண வைபவத்தில் பங்கெடுத்துக்கொண்ட மஹாவித்வான் ஜகதாசார்ய சிம்மாஸனாதிபதி ஸ்ரீமதுபயவே. P. B. அண்ணஸ்வாமி முதலாய வித்வத் கோஷ்டியில் அன்வயித்திருப்பதையும் புகைப்படமெடுத்து இதில் பிரசுரிக்கப்பட்டுள்ளது.

## மஹாஸம்ப்ரோக்ஷண உற்சவம்

சென்ற பராபவஹூ தைமீ 10உக்குச் சரியான 1967-ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 23-ம் தேதி திங்கட்கிழமை காலை மஹாஸம்ப்ரோக்ஷண வைபவமும், இரவு திருக் கல்யாண உற்சவமும் கிரமமாயும் கம்பீரமாகவும் நடைபெற்ற காட்சி மறவா வரம் பெற்றுவிட்டது. பூர்வாங்கமாக 19—1—1967 முதற்கொண்டு தினசரி இரண்டு வேளை யிலும் ஹோமாதிகள், வேத-புராண-இதிகாச-திவ்யப்ரபந்த பாராயணங்கள் குறைவின்றி நடந்ததுடன் கியாதிபெற்ற வித்வான்களின் உபந்யாசங்களும், ப்ரபந்த கோஷ்டி கச்சேரியும் தினம் ஒன்றாக நடந்ததும் ஓர் தனிச்சிறப்பு. ஹோமாதிகளில் ஈடுபட் டிருந்த ருத்விக்குகளுக்கும், வெளியூர்களிலிருந்து எள்ளியிருந்த ஸ்வாமிகளுக்கும் நித்யப்படி ததியாராதனம் விசேஷமாக நடந்தது. ஆயிரக்கணக்கில் திரண்டுவந்த ஆஸ்திக பெருமக்கள் அனைவரும் அசௌகரியமோ அலுப்போ இல்லாமல் ஐந்து நாட்களிலும் அன்வயித்து ஸேவித்து ஆனந்தமடைந்ததே கமிட்டியாருக்குக் கிடைத்த கைங்கரிய பலன். இந்து அறநிலைய ஆணையாளர்களும் ஆய்வாளர்களும் லௌகிக வைதிக ஏற்பாடுகளைக் கண்டு திருப்தி அடைந்தனர். இரண்டு வருஷங்களாக கண்ணபிரானின் திருவீதி உற்சவம் சேவிக்கப்பெருமலிருந்த அப்பேட்டை வாசிகளுக்கு அன்றிரவு திருக்கல்யாண கோலத்துடன் விசேஷ வாஹனத்தில் ஊர்வலம் கண்டருளியது கண் கொள்ளாக் காட்சியாயிருந்தது.

## மண்டலாபிஷேகம்

அன்றுமுதல் 48 நாட்கள் மண்டலாபிஷேக நித்யப்படி உபயங்களும் கடைசி இரண்டு நாட்கள், அதாவது 11—3—1967, 12—3—1967ல் விசேஷ உற்சவ ரீதியிலேயே மண்டலாபிஷேகம் பூர்த்திபெற்றது. அதை ஒட்டி அன்றிரவு வீதி புறப்பாடு உற்சவமும் வெகு அழகாகவும் நிம்மதியாகவும் கமிட்டியார் நடத்தி முடித்தனர்.

## திருப்பணியின் முக்கியாம்சங்கள்

பழைய மொட்டைக்கோபுர தளத்தின்மீது ஐந்து அடுக்குகளுடன் வானளாவி நிற்கும் நூதன ராஜகோபுரத்தின் கம்பீரத்தையும் அதன் வெளிப்புற நான்கு பக்கங் களிலும் பதிந்து கிடக்கும் விசித்திர வேலைப்பாடுடனும், ஜீவ்யகளையுடனும் பல வர்ணங் களில் பிரகாசிக்கும் பிம்பங்களின் அற்புதத்தை தனித்தனி வர்ணிக்க இயலாது. பார்த்து ரசிக்கக்கூடிய சித்திரக் கலைக்களஞ்சியம். அதன் புகைப்படம் இதில் அச்சடிக்கப்பட் டுள்ளது. அதே மாதிரி ஒவ்வொரு விமானங்களிலும் புத்துயிர்பெற்று விளங்குவன போன்ற பல பிம்பங்கள் ஜாஜ்வலிக்கின்றன. அந்தந்த சந்நிதிக்கேற்றதான பிம்பங்கள் சரித்திர விசேஷங்களை ஒட்டி தத்ரூபமாக சித்தரிக்கப்பட்டுள்ளன. ராஜகோபுரத் திலோ ஒவ்வொரு நிலையிலும் அவதார மஹிமைகளை விளக்கும் வகையில் பிம்பங்கள் அமைக்கப்பட்டுள்ளன. சிறிய சந்நிதிகளின் விமானங்களிலும் அவைகளுக்கேற்ற பிம்பங்களைப் பதிந்து வைக்கப்பட்டிருப்பது கவர்ச்சியுடனுள. ஷை சித்திரங்களை உருவாக்கிய சிற்பிகளே வியக்கும்வண்ணம் கண்ணன் தன் மாளிகையை அலங்கரித்துக் கொண்டனன் என்றெண்ணலாம்.

## ஸ்ரீ ருக்மிணித்தாயார் மண்டபம்

தாயார் சந்நிதிக்கு எதிரே திறந்த வெளியாய்க் கிடந்ததை பொறுக்காத ஒரு ஆஸ்திக சிகாமணி தனிப்படவே அங்கு 16 கால் மண்டபம் கட்டுவிக்க முன்வந்தார். இஃது வாய்க்கப்பெற்றதும் தீர்மானத்தில் பல மின்சார விளக்குகளுடன் மணி மாமண்டபமாக பிரகாசிப்பதும் தெய்வசங்கல்பமென்றே கருதலாகும். இத்திருப்பணி நடக்கும்போது எதிர்பாராது குறுக்கிட்ட சிறு இடையூறுகள் கண்ணன் மாயையால் தானே மறைந்துபோயின. காரியதரிசிகளின் மனோதிடத்தை பரீக்ஷிக்கவோ அல்லது



திருஷ்டிதோஷமாகவோ அவை ஏற்பட்டிருக்கலாம். இப் புதுமண்டப தென்பக்கச் சுவரில் இரண்டு சித்திரங்கள் பிம்பருபமாய் உருவாக்கப்பட்டுள்ளன. ஒன்று ஸ்ரீக்ருஷ்ணபகவான் தேரில் நின்றபடியே கைலாக்கு கொடுத்து ஸ்வீகரித்தல். இதை கமிட்டியாரின் புகைப்பட மேற்புறத்தில் காணலாம். மற்றொன்று; ஸ்ரீ மணவாள மாமுனிகள் திருமுன்பே ஸ்ரீரங்கநாதர் "ஸ்ரீசைலேசதயாபாத்ர" தனியன் சாதித்தருளல். இவ்விரண்டு சித்திரங்களில் காணும் விசேஷம் பார்ப்பவர் கண்முன் நடப்பதுபோல்

பிரமிக்குமளவில் பல வர்ணங்களில் தீட்டியுள்ளதும் தெய்வாநுக்ரஹம். பழைய கல்யாண மண்டபத்து வடபக்கச் சுவரில் இம்மாதிரியான சித்திரம் ஸ்ரீ பகவத்கீதா பிரகடனம் பிரகாசிக்கிறது. ஷை கைங்கரியங்களுக்காக ரூ. 1000/-க்குமேல் நன்கொடையாக சமர்ப்பித்தவர்களின் பெயரையும் சுருக்க விலாசத்தையும் கண்டு செதுக்கப்பட்ட இரண்டு பளிங்குக்கற்கள் இராஜகோபுர உட்புற சுவரில் பதியவைக்கப்பட்டிருப்பது ஒரு தனிச்சிறப்பாகும். இவ்வாறு அரிய பெருமைகளடங்கிய தேவஸ்தானத்தை இதுவரை ஸேவிக்கப்பெருத ஆஸ்திகர்கள் கூடியசீக்கிரம் ஸேவிப்பது அவசியம்.

## முடிவு உரை

ஷை தேவஸ்தானத்தில் இன்னும் நடக்கவேண்டிய திருப்பணிகள் சில உண்டு.





முதலில் வாகன மண்டபத்தைப் புதுப்பித்து வாஹனங்களேயும் பழுதுபார்க்கவேணும். அடுத்தபடியாக நந்தவனத்துக்காக உள்ள இடத்தைச்சீர்திருத்தி நித்யப்படிக்கு வேண்டிய திருத்துழாய் புஷ்பச் செடிகளைப் பயிராக்கவேண்டும். கடைசியாக தேவஸ்தான ஆபீஸ் அறையும் கட்டியாக வேண்டும். இவ்வேலைகளையும் தயங்காது எடுத்து நடத்தத் துணைக் காரியதரிசிகளுக்கு ஆஸ்தை இருந்தும் பணவசதி அதிக குறைவாய் இருப்பதால் தாமதிக்கிருர்கள். இதுசமயம் ஷை கைங்கரியங்களுக்கு வேண்டிய பொருளுதவிபுரிய உபயக்காரர் முன்வருவார் என்ற நம்பிக்கையுடன். ஷை காரியதரிசிகள் கண்ணனையே பிரார்த்தித்துக்கொண்டிருக்கிருர்கள்.

அவர்களது விலாசம் :

199/200, தம்புச்செட்டித் தெரு,
மதருஸ்-1.

ஸ்ரீ ராமாநுஜன் பத்ராதிபனை அடியேன் (P. B. A.) செய்யும் விண்ணப்பம். இந்த வியாஸம் பராபவஹு மாசி பங்குனிக்குள்ளாகவே வெளிவரவேண்டியிருந்தும் தெய்வவசமாகத் தாமதப்பட்டுவிட்டது. மஹாஸம்ப்ரோக்ஷண ஸமயத்தில் இந்த

★

ஸன்னிதியின் ஸங்நிவேசங்களை அடியேன் ஆர அமர அநுபவிக்க பாக்கியம் வாய்த்தது. ஜீர்ணோத்தாரணத் திருப்பணிக்கு முன்பும் இந்த ஸன்னிதியைப் பலகால் ஸேவித்திருக்கிறேன். இப்போதைய அமைதியை நோக்கும்போது, ஸன்னிதியின் நிர்மாணமே நூதனமோ! என்றே நினைக்கும்படியாகவுள்ளது. ஸ்ரீ உவே. வித்வான். K. வரதாசாரிய ஸ்வாமியினுடையவும் ஸ்ரீ உவே. அட்வகேட். பிள்ளபாக்கம் பகுகுடும்பி. அனந்தாசாரியர் ஸ்வாமியினுடையவும் உழைப்புகளை அடியேன் நன்கறிந்தவனுதலால் இதில் வியப்புக் கொள்ள இடமில்லையென்றெண்ணினேன். வெளிநாட்டார் பலர் மஹாபலிபுரம் வந்து சித்திரக் காட்சிகள் பல காண்பதுபோல் இங்கும் வந்து காணவேண்டிய அருமை பெருமைகளுண்டென்னத் தட்டில்லை. மஹான்களின் அபிமான விசேஷத்தினுல் இந்த திவ்யஸ்தலம் மேன்மேலுமோங்குமாக.

பலவாண்டுகட்குமுன்பு (அதாவது நாற்பது வருடங்களுக்குமுன்பு) இந்த ஸன்னிதிக்கு அருகில் ஸ்ரீமான் பச்சைபெருமாள் கோவில். பார்த்தஸாரதி ஐயங்காரென்பவர் வாழ்ந்துவந்தார். பச்சைபெருமாள் கோயிலென்பது முதலியாண்டான் ஸன்னிதி. அங்கே ஜனித்தவர் அவர். ஒருவிதத்தில் எனக்கு அவர் உறவினராவர். அடிக்கடி காஞ்சிக்கு வருவர். அவருடைய மாமனுர் என்னுடைய பக்கத்தகத்துக்காரராதலால் அவர் அங்கு வரும்போதெல்லாம் அவரோடு எனக்கு அதிகமான பழக்கம் ஏற்பட்டது. இப்போது பிரஸ்தாவித்த க்ருஷ்ணன் ஸன்னிதியில் அவர்க்கு ஏதோவொரு அதிகாரபதவியிருந்தது. அதனுல் அவர் என்னை அந்த ஸன்னிதிக்குச் சிற்சில ஸமயங்களில் அழைத்துச் செல்வர். அப்போது அவர் சென்னையிலுள்ள சில கனவான்களின் பேரைச் சொல்லி 'அவரைக்கொண்டு இந்த கைங்கரியம் செய்வித்தேன், இவரைக்கொண்டு இந்த கைங்கரியம் செய்வித்தேன்' என்று காட்டுவர். அப்போதிருந்த ஸன்னிவேசங்கள் என்னுடைய நினைவில் நன்கு பதிந்திருக்கின்றன. அப்போதைய நிலைமையையும் இப்போதைய நிலைமையையும் நெஞ்சிலிட்டு நோக்கும்போது, அஜகஜாந்தரமென்று ஒரு சொல்லுண்டே, அதுதான் நினைவுக்கு வருகின்றது. பகவத்விபூதிக்கு மேன்மேலும் அதிசயங்கள் ஏற்படுவது ப்ராப்தமேயன்றோ. மஹாதனிகர்களும் உதாரர்களும் உறையுமிடமான சென்னைமாநகரில் மிகச் சிறந்தவிடமான இந்த பேட்டையில் இந்த ஸன்னிதி இன்னமும் எவ்வளவோ விபவங்களைப்பெற்று விளங்கவேண்டியது வெகு அவசியமானது.

சென்ற தைமாதத்தில் இந்த ஸன்னிதியில் ஸம்புரோக்ஷணம் நடந்தபோது அங்கு நடைபெறும் விசேஷ விபவங்களைக் கேள்விப்பட்டு ஸேவிப்பதற்காகச் சென்றிருந்தேன். முன்னம் சித்திரஸந்நிவேசங்களையும் சிற்பச் சிறப்புகளையும் வைத்தகண் வாங்கவொண்ணுதபடி ஸேவித்தேன். பிறகு வைதிக க்ரியாகலாபங்கள் நடைபெறுமிடத்துச் சென்றபோது, சில வருஷங்களுக்குள்ளாகத் திருவரங்கம் பெரியகோயில் திருக்கண்ணபுரம் முதலான திவ்யதேசங்களில் கண்ட ப்ரக்ரியைகளுக்குக் குறைந்தனவாகத் தோன்றவில்லை. ப்ரவர்த்தகர்களில் பரிகணிதரான ஸ்ரீமதுபயவே. வரதாசார்யஸ்வாமி ஏதேனும் சிறிது பேசவேணுமென்று நியமித்தபடியால் யஜ்ஞப்ரபாவ விஷயமாக ஸ்வல்பம் விஜ்ஞாபனம் செய்தேன். அதையும் இங்குச் சேர்த்து அச்சிடவேணுமென்று ஸ்ரீ உவே. அட்வகேட். P. B. A. ஸ்வாமி நியமித்ததனுல் அந்த நியமனத்தையும் சிறிது நிறைவேற்றுகிறேன்.

அப்போது அங்கே ஸன்னிதி முழுதும் யஜ்ஞமயமாகவேயிருந்தபடியாலும் அந்த யஜ்ஞ ப்ரக்ரியைகள் அதிமாத்ரம் தர்சநீயங்களாயிருந்தபடியாலும் யஜ்ஞப்ர பாவத்தைப் பற்றியுபந்யஸிக்க பகவந்நியமனமாயிற்று. வேதத்தில் *யஜ்ஞோ வை விஷ்ணு:* என்றும் *விஷ்ணுர் வை யஜ்ஞ:* என்றும் அடிக்கடி ஓதப்படுவதாலும், ஆழ்வார்களும் எம்பெருமானை வேள்வியோடு ஸமாநாதிகரித்து [வேள்வியை] என்றும் [வேள்வியாய்] என்றும் பலவிடங்களிலருளிச் செய்கையாலும் "யஜ்ஞேந யஜ்ஞமயஜந்த தேவா: தாநி தர்மாணி ப்ரதமா ந்யாஸந், தேஹ நாகம் மஹிமாநஸ் ஸசந்தே. யத்ர பூர்வே ஸாத்யாஸ் ஸந்தி தேவா:" என்று ப்ராஹ்மண கோஷ்டிகளில் ஸுப்ரஸித்தமான ஒரு ருக்கை விவரித்துரைத்தேன்.

ஸகல யஜ்ஞங்களும் விஷ்ணுவுக்கே ஆராதந ரூபமானவையென்பது ஸகல வைதிக ஸித்தாந்தம். யஜ்ஞங்களில் "இந்த்ராய ஸ்வாஹா, ஸோமாய ஸ்வாஹா......" இத்யாதியாக தேவதாந்தரங்களுக்கு ஹவனமிருந்தாலும் *ஸ ஆத்மா. அங்காந்யந்யா தேவதா:* *இறுக்குமிறை யிறுத்துண்ண எவ்வுலகுக்கும் தன்மூர்த்தி நிறுத்தினான் தெய்வங்களாக அத்தெய்வ நாயகன்தானே* என்கிற பாசுரத்தாலும், திருமழிசைப்பிரான் *உகைக்குமேல் எத்தேவர் வாலாட்டும் எவ்வாறு செய்கையும், அப்போதொழியு மழைப்பு* என்கிற பாசுரத்தாலும் இதனை நிலைநாட்டிவைத்தனர்.

கீதாசார்யனும் (9-23.) *யே த்வந்ய தேவதாபக்தா யஜந்தே ச்ரத்தயாந்விதா:, தேபி மாமேவ கௌந்தேய! யஜந்த்யவிதி பூர்வகம்* என்ருேதி வைத்தான். அங்கு ஸ்வாமி பாஷ்யத்தில் விளக்கம் காணத்தக்கது. அதாவது, இந்திரன் முதலான இதர தேவதைகளினிடத்து பக்திபூண்டவர்கள் அந்த தேவதைகளை ச்ரத்தையோடு யஜிக்கிறுர் கள்; அவர்களும் எனக்கு சரீரபூதர்களாகையாலும் என்னையே உயிராகக்கொண்டவர் களாகையாலும், இந்திரன் முதலான சொற்களும் என்னைச் சொல்லி நிற்பதனுலும் வஸ்துஸ்திதியில் என்னையே யஜித்தவர்களாகிறுர்கள். ஆனுல், [அவிதிபூர்வகம்.] வேதாந்த வாக்கியங்களானவை இந்திரன் முதலான தேவர்களை எனக்கு அவயவபூதர் களாக எண்ணியும், என்னை ஸாக்ஷாத் ஆராத்யனுக எண்ணியும் யஜிக்கும்படி விதித்திருக்கையாலே அத்தகைய எண்ணமின்றிக்கே யஜிப்பதாகிற குறையுள்ளது என்றபடி. இவ்வர்த்தத்தையே *யஜ்ஞேந யஜ்ஞமயஜந்த தேவா:* என்று ப்ரக்ருதம் நாம் எடுத்துக்கொண்ட ருக்கும் விளக்கிக் காட்டுவதனுல் இதை இந்த யஜ்ஞ கோஷ்டி யிலே விவரித்து விண்ணப்பஞ்செய்கிறேன்.

தைத்திரீயயஜுஸ் ஸம்ஹிதையில் மூன்ருவது காண்டத்தின் முடிவான ருக்கு இது. [யஜ்ஞேந யஜ்ஞம் அயஜந்த.] யஜ்ஞத்தாலே யஜ்ஞத்தை ஆராதித்தார்கள் என்று பொருளாகிறது. இது ஸாதாரணமாக அந்வயிக்கமாட்டாது. விவரணம் கேண்மின். முதல் யஜ்ஞபதத்திற்கு ஆராதன ரூபமான க்ரியை அர்த்தம். அடுத்த யஜ்ஞபதத்திற்கு ஆராத்யனுன விஷ்ணு அர்த்தம். வேள்வியைக்கொண்டு விஷ்ணுவை ஆராதித்தார்க ளென்றபடி. *யஜ—தேவபூஜாயாம்* என்று தாதுபாடமாகையாலே பகவதாராதன ரூபமான காரியமெல்லாம் யஜ்ஞசப்தவாச்யமேயாகும். 'யஜ்ஞேந' என்பது ஜாத்யேக வசனமாய்க்கொண்டு ஆராதன ரூபங்களான க்ரியா கலாபங்களெல்லாவற்றையுஞ்

சொல்லும். *ஆகாசாத் பதிதம் தோயம்* என்ற கணக்கிலே ஸகல தேவதாராதனமும் விஷ்ணுவாராதனத்திலே பர்யவஸித்து நிற்குமென்றறிக.

வர்ணாச்ரமா சாரவதா புருஷேண பர: புமாந், விஷ்ணுராராத்யதே பந்தா நாந்யஸ் தத்தோஷகாரக:* என்கிற ப்ரமாணத்தை பட்டர் (ஸஹஸ்ரநாம பாஷ்யத்தில்) எடுத்துக் காட்டியிருக்கையாலே நாம் செய்து போருகிற சாஸ்த்ரீயங்களான வர்ணாச்ரமாசாரங்க ளெல்லாங்கூட யஜ்ஞங்களே யென்றும் இவற்றால் ப்ரீதியடைபவன் மஹாவிஷ்ணுவே யென்றும் கருத்து தேறிற்றாகும். "யஜ்ஞேந யஜ்ஞமயஜந்த" என்றதை நன்கு நினைப் பூட்டும் திருநெடுந்தாண்டகத்தில் (4) *மந்திரத்தை மந்திரத்தால் மறவாதென்றும் வாழுதியேல் வாழலாம்* என்கிற ஸ்ரீஸூக்தி. "யஜ்ஞம் யஜ்ஞேந போலே *மந்திரத்தை மந்திரத்தால்* என்கிறது. மந்திரத்தை—திருமந்த்ர ப்ரதிபாத்யனான ஸ்ரீமந் நாராயணனை; மந்திரத்தால்—திருவஷ்டாக்ஷர மஹா மந்திரத்தினால் என்றபடி. உபய வேதங்களிலும் ஸமசீலமான ப்ரயோகமுண்டென்று காட்டினோமானோம். [தேவா:] என்றது—நிலத் தேவர்களான அந்தணர்களைச் சொன்னதாகக் கொள்ளலாம். "மேலாத் தேவர்களும் நிலத்தேவரும்" என்பது திருவாய்மொழி. இவர்கள் ஸத்கர்மாநுஷ்டானங்களாலே பகவானை ஆராதித்தார்களென்றதாயிற்று.

இதன் சிறப்பைச் சொல்லுகிறதுமேல். [தாநி தர்மாணி ப்ரதமாந்யாஸந்.] என்று. தர்மாணி யென்றது கர்மாணி யென்றபடி. கீழ்ச் சொன்ன பகவதாராதன ரூபங்களான கருமங்கள் மிகச் சிறந்தவை என்றதாயிற்று. இங்கே பட்ட பாஸ்கரர் தமது பாஷ்யத்தில் எழுதுகிறார்—ஹிம்ஸையில்லாமையினாலே சிறந்தவை யென்று. வேதோக்தங்களான காம்யயஜ்ஞங்களில் பசுவிசஸநமாகிற ஹிம்ஸையுண்டன்றோ; அது இந்த யஜ்ஞத்தில் இல்லையென்று இதன் சிறப்பைக் காட்டினாராயிற்று.

இனி இந்த யஜ்ஞபலனைச் சொல்லுகிறது [தே ஹ நாக மித்யாதியால்]. தே, ஹ, என்று பதவிபாகம். [பூர்வே ஸாத்யா: யத்ர, ஸந்தி, தம் நாகம் தே மஹிமாந: ஸசந்தே] மஹிமசாலிந: என்னுமர்த்தத்திலே மஹிமாந: என்று ப்ரயோகம். *தத்குணஸாரத்வாத்து தத்வ்யபதேச: ப்ராஜ்ஞவத்* என்கிற ப்ரஹ்மஸூத்ரம் இங்கு நினைக்கத்தகும். பூர்வார்த்தத் தில் 'யஜ்ஞம்அயஜந்த' என்னப்பட்ட அந்த மஹாத்மாக்கள் [நாகம் ஸசந்தே] நலமந்த மில்லதோர் நாட்டையடைகிறார்கள். ஐந்தாவது காண்டம் மூன்றாவது ப்ரச்நத்தில் நாகசப்த நிர்வசனமுள்ளது.—*நாஸ்மா அகம் பவதி* என்றது; துக்கமில்லாத இடம் நாகம், அதுதான் நலமந்தமில்லதோர் நாடு. அது நித்ய முக்தர்களுக்கு இருப்பிடமான தென்கிறது [யத்ர பூர்வே ஸாத்யாஸ் ஸந்தி தேவா:] என்பதனால். ஸாத்யா:—பலாநுபவ நிஷ்ணாதா: என்று பாஷ்யம். *ஓம் சாந்திச் சாந்திச் சாந்தி:. ... ... ❋

## ஸ்ரீ வேணுகோபாலக்ருஷ்ண ஸ்துதி

ஸ்ரீமச் சன்னபுரீலலாடதிலகே முக்தாக்ரஹாராலயே
நித்யாவாஸரஸஜ்ஞம் ஆச்ரிதஜநத்ராணைகபத்தாதரம்
கோகோபீஜநஸேவிதம் முரளிகாநாதேந விச்வம் ஜகத்
வ்யாமுக்தம் கலயந்தமச்யுதசிசும் ஸ்ரீக்ருஷ்ணமாச்ரியம்.

# நினைவுக்குவருவன நவிலக்கேளீர்

## (3)

கோவில் பாடசாலையென்கிற சடகோபநிலய பாடசாலையில் ஸ்ரீ. சாமா. திருமலை தாதாசாரியர் என்பவர் தலைமை யுபாத்யாயராக இருந்துவந்தார். இவர் மாதாமஹ ஜீயர் ஸ்வாமிக்கு (பூர்வாச்ரமத்தில்) ப்ரதான வித்யார்த்தியாக இருந்தபடியாலும் இளமையில் இவரிடத்திலும் அடியேன் வித்யார்த்தியாயிருந்து சில நாடகாலங்கார பாடங்கள் வாசித்தேன். ஸாஹித்யத்தில் இவர் நல்ல பண்டிதர். சிறந்த விமர்சகர். எழுதுவதிலும் நல்ல கைகாரர். எனக்கு இவரோடு அதிகமான நெருக்கம் ஏற்பட்டிருந்தது. ஸ்ரீ காதிஸ்வாமி ஸுதர்சன அச்சுக்கூடம் ஸ்தாபித்து அதில் பத்ரிகாப்ரகாசனங்களும் நாநா க்ரந்த முத்ரணங்களும் ஏற்பாடு செய்தருளியிருந்தபடியால் யாமிருவரும் சேர்ந்து வாழ்ந்து அக்காரியங்களை நிர்வஹிக்க வேண்டியிருந்தது. அப்போது இந்த திருமலை தாதாசாரியார் கலாவைஷம்ய வார்த்தைகளையே அடிக்கடி எடுத்துரைப்பர். அவ்வள வோடும் நில்லாமல், தென்னசார்ய ஸம்பிரதாய தூஷணைகளை நிரப்பிச் சில சிறு சுவடி களையும் அச்சிட்டுக்கொண்டிருந்தார். அப்போது அவரோடு எனக்கு அதிக ஸஹவாஸம் நேர்ந்திருந்ததனுல் அவருடைய வெளியீடுகளை ஒன்றுவிடாமல் கண்டு கண்டிக்க வேண்டியதாயிற்று எனக்கு. அவருக்காகவே சிலபல புத்தகங்கள் அப்போது நான் எழுதவும் வெளியிடவும் நேர்ந்தது.

பாம்பே நகரத்தில் நிர்ணயஸாகர முத்ராலயாதிகாரிகள் காவ்யமாலா என்றொரு மாஸிக ஸஞ்சிகையைப் பல வருஷங்கள் நடத்திவந்தார்கள். அதில் அபூர்வமான அனேக காவியங்களை வெளியிட்டுக்கொண்டு வந்தார்கள். அதில் பாதுகாஸஹஸ்ரத்தை வியாக்கியானத்தோடுகூட அச்சிட்டார்கள். அதற்கு, இந்த சாமா திருமலைதாதாசாரியர் தவறான ஒரு பூமிகை எழுதியனுப்பி அதில் அச்சேற்றிவைத்தார். பாதுகாஸஹஸ்ரம் அவதரித்ததற்குக் காரணம் இன்னதென்பதை அந்த பாதுகாஸஹஸ்ர வியாக்கியான காரரே உள்ளபடி யெழுதிவைத்திருக்கிறார். வேதாந்தாசார்ய விஜயமென்கிற ஆசார்ய சம்புவிலும் எழுதப்பட்டிருக்கிறது. யாரோவொரு மதாந்தரஸ்தனை கவி வந்து செருக்கிக் கொக்கரிக்க, அவனுக்காகப் பாதுகாஸஹஸ்ரத்தை ஸ்வாமி இயற்றியருளின ரென்று பூருவர்கள் சரித்திரமெழுதிவைக்க, பிற்காலத்தவர்கள் கோவில்களில் சண்டை களைக் கிளப்பினதோடு நில்லாமல் அதன் பரமகாஷ்டையாக ஆசார்ய தூஷணைகளிலும் தலையிட்டு அஸங்கதமான பொய்க்கதைகளைக் கல்பனை செய்ய ஆரம்பித்து மனம்போன படியெல்லாம் எழுதிவைக்கத் துணிந்து முன்வந்தார்கள். இப்படிப்பட்டவர்களிலே சாமா திருமலைதாதாசாரியர் அக்காலத்தில் அக்ரகண்யராயிருந்தார். இவர் அந்த பாதுகா ஸஹஸ்ர பூமிகையில் என்ன எழுதியுள்ளாரென்றால், (ஸம்ஸ்க்ருதத்திற்கு நேரான மொழி பெயர்ப்பு.)

"வாதிகேஸரி யென்பவர் தாம் பெற்றிருந்த வாதிகேஸரியென்னும் பிருது காரணமான செருக்கினுலும் மருந்தில்லாத வியாதியான அஸூயையினுலும் கவித்வ விஷயத்தில் தேசிகனோடு போட்டியிட்டதனுல் பாதுகாஸஹஸ்ரம்

தோன்றியது. அந்த வாதிகேஸரி யென்பவர் பிள்ளைலோகாசார்யரோடு கூடப்பிறந்தவர்.''

என்று எழுதியுள்ளார். இக்கதையை இன்னமும் விரிவாகவே கல்பனை செய்திருக்கிறார். அதே ஸமயத்தில், தேசிகனுடைய மற்றொரு க்ரந்தமாகிய ந்யாய பரிசுத்தி மூலம் மட்டும் தேவநாகர லிபியில் சென்னையில் அச்சிட்டு வெளியிடப்பட்டது: அதற்கொரு பூமிகை யெழுதின திருவஹீந்திரபுரம் சதாவதானி ஸ்ரீநிவாஸாசாரியரும் அந்த பூமிகையில் பாதுகா ஸஹஸ்ர ப்ரஸ்தாவத்தைக் கொண்டுவிட்டுக்கொண்டு மேலே சொன்ன திருமலை தாதா சாரியரையே பின்பற்றி அதேவிதமாக ஐதிஹ்யமெழுதி வைத்தார். இவருடைய பூமிகையைப் பார்த்து அவரெழுதினாரோ அவருடைய பூமிகையைப்பார்த்து இவரெழுதி னாரோ தெரியாது. இருவருடைய பூமிகைகளும் ஸமரூபமாகவே வெளிப்பட்டன. அப்போதே அடியேன் இவ்விருவரையும் கண்டித்து உண்மையை ஸப்ரமாணமாக வெளி யிட்டு ஒரு மறுப்புப் புத்தகம் (பாதுகாஸஹஸ்ராவதாரதத்வமென்று) தேவநாகரியில் வெளியிட்டேன். பிறகு சில வருஷங்கள் பொறுத்து அது க்ரந்தலிபியிலும் வெளியிடப் பட்டு நாளைக்கும் கிடைக்கக்கூடிய நிலைமையிலிருக்கிறது. இவ்விருவரும் அநேக விஷயங்களில் இருளும் மருளும் மலிந்தவர்களென்று இதில் விரிவாக நிரூபிக்கப்பட் டிருப்பதைப் பண்டிதவுலகம் கண்டுகளிக்கின்றது. இந்நூல் அவர்களுடைய ஜீவித தசையிலேயே [அவர்களுடைய பூமிகை வெளிவந்த அடுத்த வாரத்திலேயே] வெளியிடப் பட்டு அவர்கள் கையில் நேராகவே கொடுக்கப்பட்டது: அதன் பிறகு அவர்கள் பலநாள் ஜீவித்திருந்தும் அதற்கு யாதொரு பதிலும் அவர்கள் வெளியிட்டவர்களல்லர். ப்ராமாணி கர்களான விவேகிகள் தலைதுலுக்கிக் கொண்டாடும்படியாகவே ஆதியிலிருந்து அடியேன் எழுதப் பயின்றவன். இவ்வுண்மையைத் தெரிந்துகொண்டவர்கள் அடியேனுடைய வாத நூல்களுக்கு அஞ்சலிசெய்து நிற்பார்களேயொழிய பதிலெழுத நெஞ்சாலும் நினையார்கள். சிலரோவென்னில்; இவ்வுண்மையை நெஞ்சார அறிந்துவைத்தும், சிறிது ப்ரதிவாதம் செய்து பார்ப்போமே யென்று ஆசைகொண்டு கிளர்ந்து ஆந்தனையும் கைகாட்டி, பிறகு கைகட்டி “அண்ணா! வந்தடைந்தே னடியேனை யாட்கொண்டருளே” என்றும் “அண்ணாவடியேனிடரைக் களையாயே” என்றும் அடிபணிந்து நிற்பர்கள்.

விவேகிகள் ப்ரக்ருத விஷயத்தை கவனிக்கவேணும். வாதிகேஸரியென்பவர் உத்தமாச்ரமி; அழகிய மணவாளச்சீயரென்று அவருடைய திருநாமம். இவரே திருவாய் மொழிக்குப் பன்னீராயிரப்படியும் திருவிருத்தத்திற்கு ஸ்வாபதேசவுரையும், தத்வதீப தீபப்ரகாசமும் மற்றும் அனேக க்ரந்தங்களும் ஸாதித்தவர். இவர் பிள்ளைலோகா சார்யருடைய திருத்தம்பியாரல்லர். நைஷ்டிக ப்ரஹ்மசாரியாயிருந்த அவர்க்கு வாதி கேஸரியென்கிற பிருதும் கிடையாது. இப்படிப்பட்ட பிருதங்களை அபதார்த்தமாகக் கொண்டு தள்ளுகிற ஆசார்ய பரம்பரையில் தலைநின்றவரான அழகிய மணவாளப் பெருமாள் நாயனார்தாம் பிள்ளைலோகாசார்யருடைய திருத்தம்பியார். வாதிகேஸரியென்று விருதுபடைத்த உத்தமாச்ரமியும் வேதாந்த தேசிகனும் பரஸ்பரம் ஸௌஹார்தப்பட்டவர் களென்பது உபயருடையவும் க்ரந்தங்களினால் நன்கு தெரியவருகிறது. தவிரவும், ஸ்ரீரங்கத்திற்கு வேதாந்த தேசிகன் எழுந்தருளின காலத்தில் அவ்விடத்தில் நம்பெருமா ளுடைய நிலைமை எப்படியிருந்தது? அப்போது அங்கு எந்தெந்த ஆசாரியர்கள் எழுந்

தருளியிருந்தார்கள்? இத்யாதி விஷயங்களை ஸப்ரமாணமாக ஆராயப் புகுந்தால் தெளிவாகத் தெரியவருகின்ற உண்மைகள் வேறாகும். தேசிகனைப்பற்றி நவீனர்கள் சொல்லியும் எழுதியும் போருகின்ற இதிஹாஸங்கள் எந்த புராதன க்ரந்தங்களை ஆதார மாகக் கொண்டவை? என்கிற ஆராய்ச்சி யொன்றில் மட்டும் அடியேன் இறங்கி அப்போது மேலே குறித்த திருமலைதாதாசாரியரிடமும் அவருக்குத் தோள் தீண்டிகளா யிருந்த மற்றும் ஸ்ரீ அய்யா ஸ்ரீக்ருஷ்ணதாதாசாரியார் முதலினவர்களிடமும் விசேஷ மான சர்ச்சைகளைச் செய்திருக்கிறேன்.

ஆசார்ய சம்பூ என்கிற உத்தமமான—பரமப்ராமாணிகமான பழைய க்ரந்தத்தை அவர்கள் வாயால் சொல்லுவதுமில்லை. ஏனென்றால், நவீனர்களான தாங்கள் சொல்லு வதும் எழுதுவதுமான பொய்க்கதைகளில் ஒன்றுகூட அந்த க்ரந்தரத்னத்தில் இடம் பெறாமையாலும், அதிலுள்ள கதைகளுக்கு நேர்மாறான கதைகளைத் தாங்கள் சொல்லிக் கொண்டிருப்பதனாலும் அந்த ஆசார்ய சம்பூக்ரந்தத்தை இவர்கள் பிரமாணமாக உதாஹரிக்க முடியாமற்போயிற்று. 500 ஆண்டுகளுக்கு முன்னே தங்களுடைய ஸம்பிரதாயத்தில் ஆறாயிரப்படி குருபரம்பராப்ரபாவமென்றும் மூவாயிரப்படி குருபரம்பரா ப்ரபாவமென்றும் இரண்டு க்ரந்தங்கள் ஆழ்வாராசாரியர்களின் சரித்திரங்களைத் தெரிவிப் பதற்குத் தோன்றியவையென்று சொல்லி, அவற்றுள் ஆறாயிரப்படி குருபரம்பரை யென்பது முன்னமே லுப்தமாய்விட்டதென்றும், மூவாயிரப்படி குருபரம்பரை அச்சிடப் பெற்று இருப்பதாகவும் அதுவே தாங்கள் சொல்லும் கதைகளுக்கு ஆதாரமென்பதாகவும் சில யதாஜாதர்களிடம் சொல்லி அவர்களை வஞ்சித்துக்கொண்டிருந்தார்கள். அதைப் பற்றியும் அடியேன் ஆழ்ந்து ஆராய்ச்சிசெய்து "அந்த மூவாயிரப்படி நவீநகல்பிதமே" யென்று இவர்கள் தாங்களே 1893-ஆம் வருஷத்தில் (அதாவது) அடியேனுடைய ஒன்றிரண்டு வயதில் வெளியிட்டிருந்த சில புத்தகங்களையும் பத்ரிகைகளையும் ஸம்பாதித்து எடுத்துக்காட்டி மறுவாய் திறக்கவொண்ணாதபடி செய்ய நேர்ந்தது. இதைச் சிறிது விவரிக்க அவசியமாகின்றது. மிக முக்கிய விஷயமிது.

ஸ்ரீபெரும்பூதூரில் ஸ்வாமியுத்ஸவத்தில் ஆறாந்திருநாள் வெள்ளைசாத்துப்படி யுத்ஸவம் என்று கொண்டாடப்பட்டுவருகிறது. "சிவாத் பரதரம் நாஸ்தி" என்றெழுதி அதில் எழுத்திட நிர்ப்பந்தித்த சோழனுடைய கொடுங்கோன்மையினால் கூரத்தாழ்வான் த்ரிதண்ட காஷாயங்களையணிந்து ராஜஸபைக்கு எழுந்தருளினதாகவும், ஸ்வாமி யெம்பெருமானார் வெள்ளைசாத்திக்கொண்டு வெளியேறினதாகவும் சொல்லப்படுகிற ஐதிஹ்யத்தையநுஸரித்து மேலே சொன்ன மஹோத்ஸவம் நடந்துவருகிறது. காஞ்சீபுரம் தாதாசாரியர்கள் ஸ்ரீபெரும்பூதூர் ஸன்னிதியில் சிறந்த மரியாதைகளையநுபவித்துக் கொண்டிருந்தகாலத்தில் அவர்களில் தலைவராயிருந்த ஸ்ரீமத் திருப்புட்குழி அப்பாஸ்வாமி, தண்ட்ரி பட்டப்பா தாதாசாரியர் ஸ்வாமி முதலான மஹான்கள் "இது சாஸ்த்ரவிருத்த மான நடத்தை; கூரத்தாழ்வான் த்ரிதண்டகாஷாயங்களை யணிந்ததும் கிடையாது, பாஷ்யகாரர் வெள்ளைசாத்திக்கொண்டதும் கிடையாது; இது மிகவும் தவறான—நவீந கல்பிதமான ஐதிஹ்யம்; தென்கலையார்கள் விததைதிஹ்யஸஹஸ்ரவர்ணநத்திலே வல்லவர் களாகையாலே அவர்கள் கட்டினதே இந்த ஐதிஹ்யம்; இது புஸ்தகத்தோடு நில்லாமல் ஸன்னிதியிலும் அநுஷ்டானத்தில் வருகிறதென்றால் இது நமக்கு ஸஹ்யமேயன்று;

இப்படி அசாஸ்த்ரியமாக நடத்தப்படுகிற இந்த வெள்ளைசாத்துப்படியுத்ஸவத்தன்று வடகலையார் ஒருவரும் ஸ்வாமிதர்சநமே செய்யக்கூடாது; விசேஷித்து தாதாசார்ய வம்சஸ்தர்கள் அன்று முழுவதும் ஸ்ரீ பாஷ்யகாரர் ஸன்னிதியில் ஒரு மர்யாதைக்கும் போகாமல் உபவாஸமுமிருக்கவேண்டியது'' என்று திட்டம் செய்தார்களாம்; இப்படிக்கு பத்ரிகையும் அச்சிட்டிருந்தார்கள். அப்போது, அந்த வெள்ளைசாத்துப்படி ஐதிஹ்யம் மிகவும் தப்பானது என்று வாக்வாத யுத்தங்களும் க்ரந்தச்சண்டைகளும் விசேஷமாக நடந்தனவாம். "வடகலையார் மூவாயிரப்படி குருபரம்பரையென்று ஒன்று அச்சிட்டிருக்கிறார்களே, அதிலுங்கூட இந்த ஐதிஹ்யமிருப்பதால் இது கல்பிதமன்று'' என்று தென்கலையார்கள் வாசிகமாகவும் க்ரந்த மூலமாகவும் வாதித்தார்களாம். அப்போது ஸ்ரீமத் திருப்புட்குழியப்பாஸ்வாமியின் நியமனத்தினால் மஹாவித்வத் வரேண்யரான தண்ட்ரி பட்டப்பாஸ்வாமி "ஐதிஹ்யதத்த்வம்'' என்றொரு சுவடியையெழுதி வெளியிட்டதில் மேலேசொன்ன மூவாயிரப்படி குருபரம்பரை "இதாநீந்தந கல்பிதமாகையாலே அப்ராமாணிகம்'' என்று முடிக்கப்பட்டிருக்கிறது.

அவ்வளவோடும் நில்லாமல், மேலேசொன்ன சாமா திருமலைதாதாசாரியர் எழுதிய "ஸதாசார்யப்படிரக்ஷை'' என்கிற தென்னாசார்ய தூஷணச் சுவடியிலும் மேலேசொன்ன விஷயமெல்லாம் மிக விரிவாக எழுதப்பட்டு அந்த மூவாயிரப்படி குருபரம்பரை நவீந கல்பிதமென்று கல்வெட்டாக்கப்பட்டிருக்கிறது.

"பாஷ்யகாரர் திருக்கோட்டியூர் நம்பியிடம் கேட்ட ரஹஸ்யார்த்தத்தை அங்கேயே கோபுரத்தின் மேலேறிப் பல பேர்களுக்கு வர்ஷித்தாரென்று தென்கலையார் எழுதிவைத்திருக்கிற ஐதிஹ்யமும் அசாஸ்த்ரீயம்; *பத்ரே க்ஷிதோ வா வ்யர்த்தஸ் ஸ்யாத் யத்ருச்சா ச்ருத ஏவ வா* என்கிற ப்ரமாணம் ஸர்வஜ்ஞரான பாஷ்யகாரருக்குத் தெரியாததொன்றோ. தெரிந்திருந்து ஒருகாலும் அப்படி அபாத்ரங்களிலே வர்ஷித்திருக்கமாட்டார். அப்படி வர்ஷித்ததாகச் சொல்லப்படுமைதிஹ்யம் விதததிஹ்ய ஸஹஸ்ரத்தில் சேர்ந்ததே''

என்று எழுதிவிட்டு,

"இது வடகலையாருடைய மூவாயிரப்படி குருபரம்பரையிலுமிருக்கிறதேயென்று சிலர் எடுத்துக்காட்டுகிறார்கள்; அதனால் ஒரு லாபமுமில்லை. அந்த மூவாயிரப்படி தென்கலையாரெழுதிவைத்த குருபரம்பரையைப் பார்த்து ஆவாபோத்வாபங்கள் பண்ணிக் கல்பித்ததாகையாலே அதுவும் தள்ளத் தகுந்ததே. இதுமாத்திரமன்று; ஆழ்வார்களுடைய வைபவங்களிலும் அநேகம் அசாஸ்த்ரீயமான விஷயங்கள் தென்கலையாருடைய புத்தகங்களைப் பார்த்தே எழுதியிருப்பதால் அந்த மூவாயிரப்படி ப்ராமாணிக கோஷ்டியில் பரிக்ராஹ்யமன்று''

என்று எழுதி அச்சிட்டுப் பரவச் செய்திருந்தார்கள். அது தெய்வச்செயல்.

மேலே சொன்ன மூவாயிரப்படியில் மைஸூர் பரகால மடாதிபதி ஸ்வாமிகளின் பதிப்பிலும், மேலே விவரித்தபடி ஸ்ரீமத் திருப்புட்குழி அப்பாஸ்வாமி முதலான மஹான்களால் தப்பான ஐதிஹ்யமென்று தூஷிக்கப்பட்ட கதைகள் [பல பதிப்புகளிலும் ஏறி] விளங்கிக்கொண்டிருக்கின்றன. அதில் பக்கம் 88-ல் எம்பெருமானார் வைபவ ப்ரகரணத்தில்—

"பின்பு கூரத்தாழ்வான் நடாதூராழ்வான் முதலான முதலிகளோடே உடையவர் காலக்ஷேபம் செய்துகொண்டிருக்கிறகாலத்தில் சோள ராஜாவும் வித்வான்களை யழைத்து *சிவாத் பரதரம் நாஸ்தியென்று எழுதச்சொல்லி தண்டிக்க, சிலர் அர்த்தகாமங்களடியாக எழுத்திட்டார்கள்; சிலர் அவனுக்கஞ்சி எழுத்திட்டார்கள். இத்தை நாலூரான் கண்டு எம்பெருமானுர் எழுத்திட்டாலன்றோ ப்ரயோஜநமுண்டாவது, இவர்களெழுத்திட்டால் என்ன ப்ரயோஜநம்? என்ன, சோளனும் எம்பெருமானுரை யழைத்துக்கொண்டுவரும்படி சில மநுஷ்யரை அனுப்பிவிக்க, அவர்களும் அங்கேற அழைக்கப்போக, அந்த வ்ருத்தாந்தத்தை மாத்யாஹ்நிகஸ்நாநார்த்தமாகப் போகும்போது கேட்டு முதலியாண்டான் நீராடிவர, நடாதூராழ்வான் முன்னமே அந்த வ்ருத்தாந்தத்தை வந்து சொல்லக் கேட்டு நீரன்றோ ப்ரியபாகிநேயரென்று போரவுகந்து கூரத்தாழ்வான் உடையவருடைய த்ரிதண்ட காஷாயாதிகளை தரித்துக்கொண்டு அந்த மநுஷ்யரோடே போக, பெரியநம்பியும் கூடவெழுந்தருளினுர். பின்பு நடாதூராழ்வான் முதலியாண்டான் திருக்குருகைப்பிரான் பிள்ளான் முதலானவர்கள் 'தேவரீர் இங்கிருக்க வொண்ணுது' என்று உடையவருக்கு வெள்ளைசாத்தி மேல்நாட்டுக் கெழுந்தருளப் பண்ணிக்கொண்டு போக" என்றிருக்கின்றது.

இவ்வளவோடும் நிற்கவில்லை. உடையவர் வெகுநாள்வரையில் வெள்ளைசாத்திக்கொண்டேயிருந்ததாகவும் பிறகு த்ரிதண்ட காஷாயாதிகளை ஸம்பாதித்து முன்புபோலே த்ரித்தருளினதாகவும் அதிலே (பக்கம் 89-ல்) எழுதப்பட்டிருக்கிறது.

அதிலேயே (பக்கம் 74-ல்)—திருக்கோட்டியூர் வ்ருத்தாந்தம்—

"உடையவரும் கூரத்தாழ்வானையும் நடாதூராழ்வானையும் முதலியாண்டானையும் கூட்டிக்கொண்டு திருக்கோட்டியூரில் சென்று அவர்களை ஓரிடத்தில் வைத்துத் தாமொருவருமே சென்று நம்பி திருவடிகளிலே தண்டன் ஸமர்ப்பித்து நிற்க, நம்பியும் 'இவ்வர்த்தத்தை ஒருவருக்கும் சொல்லவேண்டா'வென்று நியமித்தருளி திருமந்த்ரார்த்தத்தையும் சரமச்லோகார்த்தத்தையும் பரக்க ப்ரஸாதித்தருள, உடையவரும் க்ருதார்த்தராய் அன்று மற்றுநாள் தெற்காழ்வான் திருவோலக்கத்தில் அந்த ரஹஸ்யார்த்தத்தை எல்லாருக்கும் ப்ரஸாதித்தருள" என்றிருக்கிறது. எதில்? பரகாலஸ்வாமி பதிப்பித்த குருபரம்பரையில்.

ஆரியர்காள்! நவீநர்களது கோஷ்டியில் ஆசார்யகம் செய்கிற சிஷ்டவரிஷ்டர்கள் இப்படிப்பட்ட சரித்திரங்களை "சாஸ்த்ரவிருத்தவாதிகளான தென்கலையார் கல்பித்த தப்பான ஐதிஹ்யங்க"ளென்று இற்றைக்கும் தூஷித்து வருகிறுர்கள். 'நம்முடைய ஸம்பிரதாயத்திற்கும் ஒரு குருபரம்பராப்ரபாவ மிருக்கவேணும்' என்று நினைத்த நவீநர்கள் தென்னுசார்ய ஸம்பிரதாயத்திலுள்ள வைபவக்ரந்தங்களையே தஞ்சமாகப் பற்றவேண்டி வந்தபடியாலே அவற்றையே யெடுத்துக்கொண்டு சிலவற்றைத் தள்ளியும் சிலவற்றைச் சேர்த்தும் அதிக்ராம்யமான வார்த்தைகளை விசேஷமாகப் புகவிட்டும் மூவாயிரப்படி குருபரம்பராப்ரபாவமென்று ஒன்று வரைந்து இதை த்ருதீய ப்ரஹ்மதந்த்ரஸ்வதந்த்ர ஸ்வாமி தலையிலேவைத்து அச்சிட்டுவிட்டார்கள். இப்படி கல்பனைசெய்து அச்சிட்டவர் மைஸூர் ஸ்ரீ பரகால ஸ்வாமியிடம் வந்து "இந்த வைபவக்ரந்தம் உங்கள் கூடஸ்தர்

செய்ததாச்சே; இதை உங்கள் மடத்திலிருந்தும் வெளியிடவேண்டாமா?" என்று சொல்ல, இதனுள் என்ன விஷயமிருக்கிறது? என்பதைக்கூட விமர்சியாமலே 'இதற்காக ஆயிரம் ரூபாய்' என்று அநுக்ரஹித்து அபத்தகளிஞ்சமாக அச்சிடச்செய்து உலகமெங்கும் பரவ விட்டாயிற்று. இப்படி 70, 80 வருஷங்களுக்கு மேலாக நடந்துவருகிறது. அதுதானும் ஒரு பதிப்போடு நில்லாமல், இரண்டாம் பதிப்பு, மூன்றும் பதிப்பு என்று அவ்வப்போது களில் மறுபதிப்பேறியும் வருகின்றது. அதுகிடக்க. இந்த மூவாயிரப்படி குருபரம்பரை யொன்றுதான் இவர்கள் கூறிவரும் பொய்க் கதைகளுக்கு மூலகந்தம். அப்புத்தகம் இவர்களது கோஷ்டியில் தலைவர்களாயிருந்த மஹான்களாலே நவீநகல்பிதமென்றும் அதஏவ அப்ராமாணிகமென்றும் சிலாசாஸனம் செய்யப்பட்டானபின்பு இவர்கள் தாங்கள் சொல்லும் கதைகளுக்கு எந்த க்ரந்தத்தையும் பிரமாணமாகவெடுத்துக்காட்ட முடியாமற் போயிற்று. ஆசார்யசம்புவோ இவர்களுக்கு விஷமாய்விட்டது. மூவாயிரப்படி குருபரம்பரையென்று சொல்லிக்கொண்டு வந்தார்கள். அதன் சாயத்தை இவர்களுடைய வெளியீடுகளைக்கொண்டே நாம் கக்கவைத்தபடியால் வாயைக் கையைத் திறக்க முடியாமல் போயிற்று. அப்போது அந்த வகுப்பினர்க்கு அடியேன்மீது பிரபலமான க்ஷாத்ரமுண்டாகத் தொடங்கியது. மூலையிலே கிடந்தவற்றை முற்றத்திலே கொண்டு விட்டு விஷயங்களை நோண்டியெடுத்து நம்மை வாய்மூடுவிக்க இவனொருவன் தோன்றி னனே!" என்று கடுநெஞ்சு கொண்டார்கள். "இவன் வெள்ளக்குளம் போகும்போது ஆள்களைவிட்டு கையைக் காலை முறித்துவிடவேண்டியது" என்று ஆலோசனை செய்திருக் கிறார்களென்றும் அப்போது காதில் விழுந்தது. அதனால் பின்மாலையில் குளம் போவதை நிறுத்திப் பொழுது விடிந்தபிறகு பலருடன் சேர்ந்து குளம்போய் வருவதென்றும் சிலகாலம் வைத்துக்கொண்டிருந்தேன். இச்செய்திகள் அடியேனுடைய ப்திநெட்டாவது வயதில் நிகழ்ந்தவை. அப்போது நான் சில காரியங்களுக்காக மேலேசொன்ன சாமா திருமலை தாதாசாரியரிடம் நெருங்கிப் பழகிக்கொண்டிருந்தவன். அதனாலேயே இந்த வாத விவாதங்களில் தலையிட்டு நிர்தாக்ஷிண்யமாகவே மறுப்பெழுதினேன்.

மேலே விவரித்த படி நவீநர்களின் க்ருத்ரிமச் செயல்களையெல்லாம் கையிலங்கு நெல்லிக்கனிபோல் எடுத்துக்காட்டி அடியேன் வடமொழியிலும் தென்மொழியிலும் சில நூல்களை இயற்றி அப்போது வெளியிட்டவற்றில் ஒன்றுக்காவது ஒருவரும் பதில் சொன்னதுமில்லை, எழுதினதுமில்லை. அப்போது ஸ்ரீமத் வில்லியம்பாக்கம் கோபால தாதாசார்ய ஸ்வாமியென்கிற மஹான் ஸ்ரீ ரங்கராஜ வீதியில் வாழ்ந்துகொண்டு ஆசார்யகம் செய்துகொண்டிருந்தார். இந்த ஸ்வாமி சமதமாதிஸத்குணநிதி. வம்புதும்பு விஷயங்களில் அடியோடு தலையிட்டவரல்லர். ஏகாந்த சீலர். ஸ்ரீமத் திருப்புட்குழி ஸ்வாமி ஸன்னிதியில் காலக்ஷேபம் செய்தருளினவரென்று கேள்வி. சிறந்த வித்யாநிதி. அக்காலத்தில் பலர்க்குப் புகலாயிருந்தவர் இந்த ஸ்வாமி. இவருடைய திவ்யமங்கள விக்ரஹஸ்மரணமும் பரம பாவநமென்பது அடியேனுடைய கொள்கை. அடியேனுடைய இருபத்தைந்தாவது வயதில்தான் அந்த ஸ்வாமி திருநாடலங்கரித்தருளினர். அந்த ஸ்வாமி தினப்படியாக ஸன்னிதிக்கெழுந்தருள்வது தவறமாட்டார், புறப்பாடுகளையும் ஒரு க்ஷண காலமும் இழக்கமாட்டார். பலவாண்டுகள் அந்த ஸ்வாமியை அடியேன் தினப்படியாக ஸேவிக்கப் பெற்றவனுயினும், அவருடைய கடாக்ஷமும் அடியேன்மீது விசேஷித்து விழுந்துகொண்

டிருக்குமாஞனலும் நீசனுனவடியேன் அந்த மஹா ஸ்வாமியிடம் நெருங்க நேரவில்லை. அய்யா. ரகுநாததாதாசாரியர் ஸ்வாமியென்பவர் பலவாண்டு தேவப்பெருமாள் ஸன்னிதிக்கு தர்மகர்த்தாவாக இருந்தவர். பகவத் விஷயாதிகாரி. சிறந்த விவேகி. ஸ்ரீமத் காதிஸ்வாமி ஸன்னிதிக்கு அடிக்கடி வருபவராதலால் என்னிடத்தில் அவர்க்கு ஸஹ்ருதயமான ப்ரீதி உண்டாயிருந்தது. அப்போது அடியேனெழுதி வெளியிட்டிருந்த பாதுகாஸஹஸ்ராவதாராதி விஷயகங்களான வாதக்ரந்தங்களை அந்த ஸ்வாமி ஊன்றிக் கடாக்ஷித்து, மற்ற பேர்களைப்போலே மனக்கலக்கம் கொள்ளவேண்டியிருந்தும் அது சிறிதுங்கொள்ளாமல் உண்மையான விஷயங்களை ஸப்ரமாணமாக நிருபணம் செய்து ப்ரதிவாதம் பண்ணுவதற்கு எள்ளளவும் அவகாசமில்லாதபடி நான் செய்துவைத்திருந்த வைகரியில் மிகவுமீடுபட்டுப் பலருடைய முன்னிலையில் அதிமாத்ரம் கொண்டாடினது மல்லாமல், தேவப்பெருமாளுடைய ஒருபுறப்பாட்டில் (மேலே சொன்ன) ஸ்ரீமத். வில்லியம்பாக்கம் ஸ்வாமியோடு தாம் வார்த்தையாடிக்கொண்டிருக்கையில் சிறிது தூரத்தி லிருந்த அடியேனை அருகே வரவழைத்து "உம்முடைய க்ரந்தத்தை ஸ்வாமி ஸன்னிதி யிலே காண்பித்தீரா?" என்று கேட்டுவிட்டு, அந்த ஸ்வாமியிடத்தில் இதைப்பற்றி வெகுகாலம் ஆனந்தம் பொங்கிவழியப் பேசினுர். அப்போது திருமுற்றவெளியில் அவர் அந்த ஸ்வாமியிடம் சொன்ன வார்த்தைகளின் ஸங்க்ரஹம் வருமாறு:—"ஸமீபகாலத்தில் இவர் ஒரு க்ரந்தமெழுதியிருக்கிருர்; அது ஸம்ஸ்க்ருதத்திலும் தமிழிலுமிருக்கிறது. அதை ஸ்வாமி அவசியம் கடாக்ஷிக்கவேணும்; நமக்கெல்லாம் அது கண்டனமாகத்தானிருக்கும்; இருந்தாலும் தனக்கு விவக்ஷிதமான விஷயங்களை ராஜபாட்டையிலே சென்று விசதீகரித் திருக்குமழகு ஸ்வாமி நேரில் கடாக்ஷித்தால் மிகவும் ரஸிக்கக்கூடியதாகும். அதை எத்தனை தடவை வாசித்தாலும் என்க்கு த்ருப்தியே உண்டாகவில்லை. நம்ம திருமலை தாதத்தின்மேல் கண்டளமாக எழுதியிருக்கிருர்; திருமலைதாதத்தையே நான் கேட்டேன் "அண்ணு எழுதியிருப்பது உனக்குக் கிடைத்ததா? பார்த்தையா? அதற்கு பதில் வெளி வருமா?" என்று கேட்டேன்; அவனும் இதைக் கொண்டாடியே பதில் கூறினுன்; ஸ்வாமி இதை அவசியம் கடாக்ஷிக்கவேணும்—என்று பலவும் கூறினுர். இப்படிப்பட்ட விஷயங்களில் ருசியில்லாதவரான அந்த வில்லியம்பாக்கம் ஸ்வாமியும் இதைக் கடாக்ஷிக்க விருப்பி வரவழைத்துக் கடாக்ஷித்தருளி மிகவுமுகந்தார். அதிலிருந்து அந்த ஸ்வாமியோடும் அடியேனுக்கு நெருங்கின பழக்கமேற்பட்டது. ... ... ❋

## அடியேனுடைய ஆந்திரப்ரதேச ஸஞ்சாரம்.

நேற்றைய விஜயதசமியன்று (13—10—67) தொடங்கி ஐந்துநாள் நிஜாமாபாத் மகாநகரத்தில் ஸ்ரீ மஹாவிஷ்ணுயஜ்ஞம் நடைபெற்றது. நிஜாமாபாத்நகரம் ஹைதராபாத் நகரத்திற்கு நூறு மைலுக்கு அப்பாலுள்ளது. மிகப்பெரிய வியாபாரஸ்தலம். ஸ்ரீ வைஷ்ணவ ஆஸ்திகர்களும் தனிகர்களும் நிறைந்த நகரமிது. காசியில் ராமாநுஜாசாரி யென்கிற உத்த்ராதி ஸ்ரீ வைஷ்ணவர் ஏழு வருஷங்களுக்குமுன்பு காஞ்சீபுரத்திற்கு வந்து தேவப்பெருமாள் மணவாளமாமுனிகள் ஸன்னிதியில் ஸம்ந்யாஸாச்ரமம் பெற்றுப் போயினர். இவர் ஸம்ஸ்க்ருத வித்வாநுதலால் காசியில் ஏற்கனவேயிருந்த ஜகத்குரு

5

பகவத்ராமாநுஜபீடத்தில் அமர்ந்து விசிஷ்டாத்வைத மதப்ரசாரம் செய்யத் தலைப்பட்டார். அந்த ப்ராந்தத்தில் சிலபல ஸ்ரீ வைஷ்ணவர்கள் இவர்க்கு சிஷ்யர்களாகச் சேர்ந்தார்கள். அவர்தாம் இந்த ஸம்வத்ஸரம் சாதுர்மாஸ்ய ஸங்கல்பத்தை நிஜாமாபாத் நகரத்தில் அனுட்டிக்கவந்தார். அவ்விடத்தில் கோசாலையென்னுமிடம் மிக விஸ்தாரமுள்ளதும் புனிதமுமானது. அவ்விடத்தில் யஜ்ஞகுண்டங்களை அமைத்து நான்குவேத பாராயணுதி காரிகளையும் வரவழைத்து, இதிஹாஸபுராணுதி படனங்களுடன் வேதபாராயணங்களைச் செய்வித்து வெகு அற்புதமாக யஜ்ஞம் நடத்தப்பட்டது. விச்வகல்யாணுர்த்தமென்றே ஸங்கல்பித்து நடந்ததாகையால் அபரிமிதமான பக்தஜனங்கள் குழாங்கூடிக் களித்தது மிகச் சிறந்த கண்காட்சியாக இருந்தது.

அடியேன் தூரதேசப்ரயாணத்தை நிறுத்திக்கொண்டு பல வருஷங்களாய்விட்டன; சக்தியில்லாமையே அதற்கு முக்கிய காரணம். ஆயினும் அநிவார்யமான நிர்ப்பந்தவசத்தினுல் உபயஜாமாதாக்களின் ஸஹயோகத்தைப் பெருந்துணையாகக்கொண்டு புறப்பட்டுச் சென்றேன். அவச்யம் தர்சநீயமான விசேஷமிது என்றே தோன்றிற்று.

தினப்படி இரவு காலங்களில் வித்வத்ஸம்மேளனம் நடைபெற்றது. காசி, டில்லி முதலான விடங்களிலிருந்தும் வடநாட்டுப் பண்டிதர்கள் வந்திருந்தார்கள். அந்த கோஷ்டியில் கூடினவர்கள் தெலுங்கு ஹிந்தி ஆகிய இரண்டு பாஷைகளைமட்டுமே அறிவர்கள். ஸம்ஸ்க்ருத பண்டிதர்களும் ஆகந்துகர்களாய்க் கூடியிருந்தபடியாலே இந்த மூன்று பாஷைகளிலும் நம்முடைய ப்ரவசனங்கள் நடைபெற நேர்ந்தது. இதரபண்டிதர்களின் பிரவசனங்களும் நடந்தன. பக்த ஜனங்களின் குதூஹலம் வாசாமகோசரம். 17—10—67 பௌர்ணமியன்று மாலை அவபிரதம் முடிந்து யஜ்ஞஸமாப்தியாயிற்று.

மறுநாள் பின் மாலை அங்கிருந்து புறப்பட்டு ஹைதராபாத் நகரம் வந்து சேர்ந்தோம். அந்த மஹா நகரத்திற்குத் திலகமாக விளங்கும் ஸ்ரீமதுபயவே. M. ஸௌந்தரராஜனையங்கார் ஸ்வாமியினுடையவும் மற்றும் அன்பர்களினுடையவும் ஆதரவின்கீழ் அவ்விடத்திலும் ஸெகந்தராபாதிலும் மூன்று நாட்கள் தங்கியிருக்க நேர்ந்தது. ஸெகந்தராபாதில் ஸ்ரீமத்பரமஹம்ஸ. ஸ்ரீவானமாமலை ஸ்வாமியின் அபிமான பாத்ரபூதமான ஸ்ரீலக்ஷ்மீ நாராயணன் ஸன்னிதி, அதன் ஸமீபத்தில் ஸ்ரீவேங்கடேசப் பெருமாள் ஸன்னிதி, அதன் ஸமீபத்தில் ஸ்ரீரங்கநாதன் ஸன்னிதி ஆகிய இம்மூன்று ஸன்னிதிகளிலும் உபந்யாஸங்கள் நடைபெறவேணுமென்று ஏற்பாடு செய்திருந்தார்கள். மூன்றுவேளைகளில் பகவத்கீதாத்யுபந்யாஸம் ஆந்திர பாஷையில் நடத்தப்பட்டது.

அடுத்த பக்கத்தில் காண்கிற திருவுருவக்காட்சியில் அடியேனுடைய பக்கத்தில் ஸேவை ஸாதிப்பவர் ஸ்ரீ லக்ஷ்மீநாராயணன் ஸன்னிதியதிகாரியான ஸ்ரீமதுபயவே. தேவநாயகாசாரியர்ஸ்வாமி. உபயஜாமாதாக்களினிடையில் ஸேவை ஸாதிப்பவர் ஸ்ரீமதுபயவே. M. ஸௌந்தரராஜனையங்கார் ஸ்வாமி. கீழே வீற்றிருப்பவர்களில் எண்டோமெண்டு டிப்டி கமிஷனர் ஸ்ரீஉவே. K. கோபாலனையங்கார் நடுநாயகமாக விளங்குகிருர். மற்றையோர்கள் அந்த நகரத்தில் வாழும் பிரபல வியாபாரிகள்.

ஹைதராபாத் நகரத்திலும் ஸேட்டுகளின் கோரிக்கைக்கிணங்கி 19—10—67 இரவு மார்வாடி தர்ம சாலையென்னும் மிகப்பெரிய பவனத்தில் ஹிந்தியில் ஒரு உபந்யாஸம் நிகழ்த்தப்பட்டது.

முடிவாக ஒரு வார்த்தை. நமது நாட்டில் வக்தாக்களும் ப்ரவக்தாக்களும் ஆங்காங்கு இருப்பதால் ச்ரவணருசியுடையவர்களுக்குச் செவியுணவு ஒருவாறு கிடைத்து



வருகிறது. அந்த நாட்டில் ருசியுடையார் அபரிமிதமாக விருந்தாலும் தார்மிக விஷயங்களை யெடுத்துரைப்பார் விரளமாயிருப்பதால் அந்நாட்டினர் பலரும் பிபாஸையோடும் புபுக்ஷையோடுமிருந்து வருகிறார்கள். இக்காலத்தில் அறநிலைய ஆணையாளர்கள் [எண்டோமெண்டு தலைவர்கள்] ஆங்காங்கு மதப்பிரசாரம் செய்ய ப்ரவக்தாக்களை நியமித்து வருவதாக அறிகிறோம். இந்த நியமனம் க்ரமேண எல்லாவிடங்களிலும் பரவுமென்று நம்பியிருக்கிறோம். ... ... ...

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.

# பழைய மாம்பலத்தில் வேதபாராயண ஸபை.

சென்னை மேலமாம்பலத்திலுள்ள சங்கர மடத்தில் ஆறேழு வருஷகாலமாய் தினப்படி மாலை வேளையில் யஜுர்வேதம் க்ரமபாராயணம் அவிச்சின்னமாக நடந்து வருவது ஆஸ்திக வைதிகர்களுக்குத் தெரியாமலிராது. கனாந்தபாடிகளும் க்ரமபாடிகளுமாக ஏழெட்டு சுரோத்திரியர்கள் கூடி அநுஸ்யூதமாக க்ரமபாராயணம்செய்து வருவதும் இதற்கு வருஷாந்தக் கொண்டாட்டங்கள் நடத்திவருவதும் லோகக்ஷேமத்திற்குரிய ஸத்காரியங்களில் தலையானதென்று கருதத்தக்கது. ஸமய விசேஷங்களில் இந்த விலக்ஷண கோஷ்டியில் அந்வயிக்கும்படியான பாக்கியம் நமக்குக் கிடைப்பதுண்டு. நேற்று 22—10—67 இரவு 7 மணி முதல் 10 மணி வரையில் வருஷாந்தக் கொண்டாட்ட நிகழ்ச்சியில் நாமும் பங்கெடுத்துக்கொள்ள நேர்ந்தது. வேதத்தையே பெருஞ்செல்வமாகக் கொண்டிருக்கின்ற பரம வைதிகர்கள் மலிந்த கோஷ்டியைக் கண்ணாரக் காண்பதும் ஒரு ஸுக்ருதமன்றோ. அத்தகைய கோஷ்டியில் பேசும் பாக்கியமும் பெறுவது அபூர்வ லாபமன்றோ. 22-10-67 தேதி நிகழ்ச்சியைப் பற்றியன்றோ இப்போது நாம் இங்குத் தெரிவித்து வருவது. அற்றைக்கு முந்தின



நாளில்தான் ஆந்திரதேசச் சிறு ஸஞ்சாரத்தை முடித்துக்கொண்டு சென்னை சேர்ந்தது. சேரும் க்ஷணத்திலேயே ஸ்ரீமத் திருக்குடந்தை அக்நிஹோத்ரம் தாததேசிக தாதாசாரிய ஸ்வாமிகள் பரமபதமெய்திய செய்தியை யுணரநேர்ந்தது. அந்த மனக்கிலேசம் மாறாமலிருக்கும்போதே மேலே குறித்த வேதபாராயண ஸபையில் உபந்யாஸகனாக அந்வயிக்க நேர்ந்தது. இருபது நிமிஷகாலத்தை அக்நிஹோத்ரம் ஸ்வாமியின் குணானுபவமயமாகவே கடத்தினேன். அன்றைய உபந்யாஸத்தை வேதலக்ஷணமீமாம்ஸையாகவே நடத்தினேன். ப்ரஹ்மஸ்ரீ சேங்காலிபுரம் அனந்தராமதீக்ஷிதரவர்கள் அருகேயிருந்து கேட்டு உகந்தார்கள்.

இன்று இதை நாம் எழுதிக்கொண்டிருக்கும்போது, மேலே கூறிய மாம்பலம் வேதபாராயண ஸபையின் காரியதர்சிகளனுப்பிய "கார்த்திகாவாரமண்டல யஜுர்வேத பாராயணம்" என்று மகுடம் புனைந்த பத்ரிகை கிடைத்தது. இதிலுள்ள விஷயமாவது— "உலக க்ஷேமத்தின் பொருட்டு கார்த்திகை மீ முதல் தேதியிலிருந்து 44 நாட்கள் யஜுர் வேத ஸப்தகாண்டத்தின் 44 ப்ரச்னங்களை ஒவ்வொரு ஆஸ்திகரின் க்ருஹத்துக்கும்போய் க்ரமபாராயணம் செய்யப்படுகிறது; 10 வேதவித்வான்களைக்கொண்டு 44 நாட்களிலும் மாலை 7 மணிமுதல் 9 மணிவரை நடைபெறவிருக்கிறது" என்பதாம். இத்தகைய லோக க்ஷேம காரியங்கள் மேன்மேலும் ஓங்கி விளங்குக. ... ...



# வைதிகவுலகுக்கு விசேஷவிபத்து.

திருக்குடந்தையிலெழுந்தருளியிருந்த ஸ்ரீமத் அக்நி ஹோத்ரம். தாத தேசிகதாதாசார்ய ஸ்வாமியை அறியாத ஆஸ்திகர்களோ அந்தணர்களோ வைதிகர்களோ இந்தியாவில் இல்லையென்று திட்டமாகச் சொல்லலாம். *ரூபமே வர்ஸ்யைதந் மஹிமாநம் வ்யாசஷ்டே* என்னும் படி ஸ்வாமியின் திருமேனி விளக்கமே அப்ரதிம ப்ரபாவத்தை அறிவிக்கும். இந்த மஹா ஸ்வாமி 20—10—67-ல் திருக்குடந்தையில் ஐயங்கார் வீதியில் தமது திருமாளிகையில் திருநாடலங்கரித்தது அன்றே ஜகத் ப்ரஸித்தமாகியுள்ளது. வைதிகவுலகம் முழுவதும் ஸமரூபமாக சோகிக்கும்படி நேர்ந்தவிது "பலவதீ பவிதவ்யதா" என்னத்தக்கதத்தனே.



ஸ்வாமியை ச்ருதி ஸ்மிருதிமீமாம்ஸா கல்பஸூத்ரவிசாரதரென்றும் வேதபாஷ்ய ப்ரவீணரென்றும் வைதிகவுலகம் போற்றி வந்தது. ஜநாதிபதி. டாக்டர் ராதாகிருஷ்ணனவர்களால் நான்கு வருஷங்களுக்கு முன்பு வடமொழி வல்லுநர் பாராட்டு வழங்கப்பட்டிருந்தது உலகப் பிரசித்தம். ஸ்ரீ வைஷ்ணவர்களுள் ஆஹிதாக்நியாக எழுந்தருளியிருந்த அத்விதிய மஹான் இந்த ஸ்வாமி. இவர்க்குத் திருத்தமையனர் பட்டுஸ்வாமியென்று ப்ரஸித்தராயெழுந்தருளி

யிருந்தவர் இருபது ஸம்வத்ஸரங்களுக்குமுன் திருநாடலங்கரித்தார். இவருடைய திருத்தம்பியார் கோபால தேசிகாசாரியர்ஸ்வாமியும் (ஆர்யதர்ம பத்ராதிபராயிருந்தவர்) பலவாண்டுகட்கு முன்னமே பரமபதித்தார். வைதிகோத்தம வித்வன்மணிகளான இம்மூவரையும் இளமை தொடங்கியே நன்கறிந்தவனடியேன். அறிந்ததுமட்டுமன்று; அவர்களது விசேஷக்ருபைக்கும் பாத்ரபூதனுயிருந்தவன். ப்ரக்ருதம் பரமபதித்த ஸ்ரீ தாதாசார்யஸ்வாமிக்கும் அடியேனுக்கும் முப்பத்தைந்து வருஷங்களுக்குமுன்பு வேதலக்ஷண க்ரந்த சர்ச்சை ஏற்பட்டிருந்ததனுல் எம்மிருவர்க்கும் வைமநஸ்யமுண்டு போல் சிலர் க்ரஹித்திருப்பது தவறு. அந்த ஸ்வாமியின் அவ்யாஜஸௌமநஸ்யம் அப்ரகம்ப்யமானதென்று ஒரே வார்த்தையில் முடித்துக்கொள்ளுகிறேன். உலகப்ரஸித்தி பெற்றிருக்கின்ற அக்நிஹோத்ரம் ராமாநுஜ தாதாசார்யர் இந்த ஸ்வாமியின் மூத்த திருக்குமாரரே. தீபாதுத்பந்ந ப்ரதீபமென்னத்தகுந்தவிவர் திருத்தகப்பனுருடைய ஸ்தானத்தைப் பரிபூர்த்திசெய்ய வல்லவரென்று வைதிகவுலகம் ஆச்வாஸமடையத்தக்கது.

## புத்தக வரவேற்பு

சென்னை லிப்கோ கம்பெனியார் உதாரஹ்ருதயத்துடன் லோகோபகாரார்த்தமாக அடிக்கடி பல புத்தகங்களை வெளியிட்டு வருவது உலகமறிந்தது. ஸமீப காலத்தில் ஸ்ரீ விஷ்ணுஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம் பலபல அனுபந்தங்களுடன் வெளிவந்துள்ளது. இதுவெகு ஆச்சரியமான பதிப்பு. விஷ்ணுஸஹஸ்ரநாமத்தைப்பற்றின விளக்கங்களைத் தெரிந்துகொள்வதற்கு இப்புத்தகம்போன்றது வேறு எதுவுமில்லையென்று திடமாகச் சொல்லுவோம். ஸஹஸ்ரநாம ப்ரஸ்தாவமுள்ள திவ்யப்ரபந்தப்பாசுரங்களையெல்லாம் பூர்த்தியாகத் தொகுத்திருப்பது இப்பதிப்பிற்குத் தன்னேற்றம். இது கிடைக்குமிடம்— "தி. லிட்டில் ப்ளவர் கம்பெனி. மதராஸ்-17." விலை 5-00 ரூபா மட்டுமே. ...

## சின்ன காஞ்சீபுரம் க்ரந்தமாலா ஆபீஸின் விளம்பரம்

# ஸ்ரீமதுபயவே. S. ராகவையங்கார் (Raosahib. Madras-24.) ஸ்வாமியின் சதாபிஷேக நிகழ்ச்சி.

ரிடைர்ட் டிப்டி கலெக்டர் ஸ்ரீ ராகவையங்கார் ஸ்வாமிகளுக்கு 26-10-67 தேதியில் சதாபிஷேக மஹோத்ஸவம் திருவல்லிக்கேணியில் வெகு சிறப்பாக நடைபெற்றது. விச்வப்ரஸித்த மஹா விவேகியாயும், விசேஷித்து அடியேனுக்குப் பரமாப்தராயுமெழுந் தருளியிருக்கின்ற இந்த ஸ்வாமியின் இம்மஹோத்ஸவத்தை அடியேன் கூடியிருந்து குளிர்ந்து அநுபவிக்க வேண்டியவன். உடல்நலக்குறைவினால் இந்த மஹா பாக்யத்தை இழந்தேன். ஆனாலும் நிகழ்ச்சிகளை ஆப்தர்கள் மூலம் தெரிந்துகொண்டு இங்கு சுருக்கமாக வெளியிடுகிறேன்.

26-10-67 ப்ராஹ்ம முஹூர்த்தத்திலேயே பகவதாராதனம் ஆரம்பிக்கப்பட்டு, திவ்யப்பிரபந்த ஸேவை; வேதபாராயணம்; ஸ்ரீ ராமாயண ஸ்ரீ பாகவதாதி பாராயணங்கள் நடைபெற்றது. சாத்துமுறைக்குப் பிறகு சௌநகஸ்ம்ருதியில் விதிப்படி சதாபிஷேகச் சடங்குகள்; விஷ்ணு ஆராதனமாகவே நடைபெற்றன. ஐந்து கலசங்களில் ப்ரஹ்மா முதலான தேவதாவாஹனம்செய்து, கங்காதீர்த்தத்தையும்; கங்கையில் புனிதமான காவேரி தீர்த்தத்தையும் சேர்த்து, புருஷஸூக்தம் முதலான மந்திரங்களினால் ஜபங்கள் செய்யப் பட்டன. அந்த தீர்த்தங்களினால் ஸஹஸ்ரதாரா மங்களஸ்நானம் செய்விக்கப்பெற்றார். ஆநுஷங்கிகமான வைதிக ஹோமம் முதலானவையும், தசதானங்களும் விதிப்படி செய்யப்பட்டன. பிறகு அழகிய மணவாளன் பிரஸாதமும்; ஸ்ரீ பார்த்தஸாரதி ப்ரஸாதமும் பெற்றுக்கொண்டு மாங்கல்யதாரணம் நடைபெற்றது. கோஷ்டி ஆசீர்வாதங்களைப் பெற்றுக்கொண்டு பார்த்தன் தன் தேர்முன் நின்றானையும், தெள்ளிய சிங்கமாகிய தேவையும் மங்களாசாஸனம் செய்துகொண்டு பங்க்தி போஜனம் விசேஷமாக நடைபெற்றது.

ஸ்ரீ C. V. Rajan, V. N. Venkatavaradachariar, Sri Champakesa Iyengar முதலான பல ஆப்த மஹநீயர்கள் இந்த முஹூர்த்தத்தில் உடனிருந்து நடப்பித்தது குறிப்பிடத்தக்கது. ஸ்வாமி பல்லாண்டு பல்லாண்டு எழுந்தருளியிருக்கவேணும்.

இங்கு அடியேனுடைய முக்கியமான விஞ்ஞாபனம்: தென்னிந்தியாவிலும் வட இந்தியாவிலும் அடியேனுக்கு ஆப்தர்களான வித்வான்களும் விவேகிகளும் எண்ணிறந்துள்ளார்கள். அவர்களோடு பத்ரவ்யவஹாரங்களும் நடந்துவருவதுண்டு. ஸ்ரீ ராகவையங்கார் ஸ்வாமியினுடைய ஸ்ரீமுகங்களும் மாதம் இருமுறை தவறாமல் கிடைத்துவரும். அந்த ஸ்ரீமுகங்களிலிருந்து ஸ்வாமியின் மேதாப்ரதிபா விலாஸங்களையும் பஹுக்ரந்த பரிசீலன ஸாமர்த்தியத்தையும் அபரிமிதமான ஞாபகசக்தியையும் கண்டறிந்து அடியேனுள்ளம் குழையும்விதத்தை எங்ஙனே மொழிவேன். நம்முடைய பூர்வாசார்ய க்ரந்தங்களிலோ இதிஹாஸபுராணாதிகளிலோ ஸ்வாமி கடாக்ஷியாதபாகம் இல்லையென்று சபதம் செய்வேன். அத்விதீயவ்யக்தியான இந்த ஸ்வாமி நீடூழி வாழவேணும். ...

# முனித்ரய ஸம்ப்ரதாயம்

ஸ்ரீ வைஷ்ணவத் திரளில் மடம், முனித்ரயம் என்று இரண்டு வகுப்புகள் வ்யவஹாரத்திலுள்ளன. ஸ்ரீமதஹோபிலமட சிஷ்யபரம்பரையைச் சேர்ந்தவர்கள் மடத்தார் என்றும் ஸ்ரீ ஸந்நிதி ஸம்ப்ரதாயஸ்தர் என்றும் வழங்கப்பட்டுவருகிறார்கள். அவர்களிற்காட்டிலும் வேறுபட்டவர்கள் முனித்ரய ஸம்ப்ரதாயஸ்தர்களெனப்படுகிறார்கள். இந்த பேதவ்யபதேசம் வடகலை வகுப்பில் உள்ளது. மடத்தார் என்னும் வகுப்பினரைப்பற்றி இங்கு வக்தவ்யமொன்றுமில்லை. முனித்ரயத்தார் என்னப்படுமவர்களுக்கு அந்தவ்யபதேசம் எக்காரணம்பற்றி நிகழ்ந்ததென்பது சிறிது விமர்சிக்கலாகிறது. திருக்குடந்தை கோபால தேசிகன் என்று ப்ரஸித்தரான ஒரு மஹாபுருஷர் ஜ்ஞான வைராக்யஸம்பன்னராகப் பதினெட்டாவது நூற்றாண்டில் எழுந்தருளியிருந்தாராம். அந்த ஸ்வாமி ஸன்னிதியில் யதிகள் மூவர் ஆச்ரயித்து ஸம்ப்ரதாயப்ரவர்த்தகர்களாக விளங்கினார்களாம். அந்த மூவரும் முநித்ரயமென்று வழங்கப்பட்டுவந்தார்களாம். அவர்களது பரம்பரையில் படிந்தவர்கள் முனித்ரய ஸம்ப்ரதாயஸ்தர்களெனப்படுகிறார்கள். இங்ஙனேதான் நாம் இளமை தொடங்கிப் பல பெரியார்களிடம் கேட்டுவந்தது.

ஒரு ஸமயம் ஸ்ரீரங்கம் விடைகொண்டிருந்தபோது ஆண்டவனாச்ரமத்திற்குச் சென்று ஸ்ரீமத் பரமஹம்ஸ. தென்பரையாண்டவன் ஸன்னிதியிலே ஸ்வல்பாவகாசம் வார்த்தையாட நேர்ந்தபோது அங்கு இந்த சர்ச்சை நிகழ்ந்தது. அப்போது அந்த ஸ்வாமி ஸாதித்தருளினதாவது, முனித்ரய ஸம்ப்ரதாயமென்பதற்கு இப்படித்தான் அர்த்தம் சொல்லிவருகிறார்கள்; ஆனால் எனக்குத் தோன்றுவதாவது—ஸ்ரீ நாதமுனிகள் யாமுன முனிகள், ராமாநுஜமுனிகள் ஆகிற முனிகள் மூவரையும் மூலபுருஷர்களாகக்கொண்ட ஸம்ப்ரதாயம் முனித்ரய ஸம்ப்ரதாயம் என்னலாம்—என்று. அதற்குமேல் அடியேன் விஜ்ஞாபித்தேன்—இப்படி அர்த்தங்கொண்டால் பகவத் ராமாநுஜ தர்சனஸ்தர்களான ஸ்ரீ வைஷ்ணவர்கள் யாவருமே முனித்ரயத்தாராக வழங்கப்படலாமே; அப்படியில்லையே. திருக்குடந்தையில் ப்ரஸித்த வித்வானாக வாழ்ந்த ஸ்ரீ உவே. அம்மாஸத்ரம் சேஷாசாரியர் ஸ்வாமி முனித்ரயமந்திரமென்று கட்டி அதில் கோபாலதேசிக சிஷ்ய முனித்ரயத்தை ஸ்தாபித்திருப்பதாகவும் ப்ரஸித்தமாயிருக்கிறதே......இத்யாதிகள் விஜ்ஞாபித்தேன். அதற்கு அந்த ஸ்வாமி ஸாதித்தது—ஆமாம்; இப்படி சொல்லுவதில் இந்த ஸம்ப்ரதாயம் அத்யந்தம் நவீனமென்று ஏற்பட்டுவிடாதா? ஆகவே இந்த ப்ரக்ரியையையடக்கி நான் சொல்லுகிறபடியே ப்ரசாரத்தில் கொண்டுவரப் பார்க்கிறேன் என்று. ஸ்ரீ வைஷ்ணவர்களெல்லாருமே முனித்ரய ஸம்ப்ரதாயஸ்தர்களென்று வழங்கப்படவேண்டிவரும் என்றால் வரட்டுமே, அதனால் என்ன பாதகம்? என்றும் ஸாதித்தார்.

அந்த தென்பரையாண்டவன் ஸ்வாமியின் ப்ரசாரம் இப்போது பலேக்ரஹியாகி வருவதாகக் காண்கிறோம். இங்கு ஒன்றே சொல்லி நிற்கிறோம். அநாதி ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாயத்தில் "ஆழ்வார் திருவடிகளே சரணம், எம்பெருமானார் திருவடிகளே சரணம், ஜீயர் திருவடிகளே சரணம்" என்கிற அநுஸந்தானம் தொன்றுதொட்டு நிகழ்ந்து வருகிறது. ப்ரணவத்திலுள்ள அகார உகார மகாரங்களை பீஜாக்ஷரமாகவைத்து (அ) ஆழ்வார்; (உ) உடையவர்; (ம) மணவாளமாமுனிகள். ஆக சடகோபமுநி, ராமாநுஜமுநி, வரவரமுநி ஆகிய முனிவர் மூவரையும் மூலபுருஷர்களாகக்கொண்ட ஸம்பிரதாயம் முனித்ரயஸம்ப்ரதாயம் என்று அநுஸந்திப்பது நன்று. ... ... ❀

# எழுபத்தேழு பெரியார்களின் பெருமை

(முன் தொடர்ச்சி—3.)

## 18. ஸ்ரீமதுபயவே. ஷஷ்டி. க்ருஷ்ணமாசாரியர்ஸ்வாமி.

சதுஷ்ஷஷ்டி கலாவல்லப, பரவஸ்துகுலதிலகராய், ஷஷ்டியென்று சுருக்கமான உபபதத்தையுடையரான இந்த ஸ்வாமி ஸ்ரீகாஞ்சியில் கீழண்டை மாடவீதியில் எழுந்தருளியிருந்தவர். இவர் பரமபதித்து ஐம்பது ஸம்வத்ஸரமாகிறது. விசேஷித்து வியாகரண சாஸ்த்ரத்திலும் உபயவேதாந்தங்களிலும் பாண்டித்யம் பெற்றவர். இங்கு ஸன்னிதிவீதி, வானமாமலை மடத்தில் நடந்து கொண்டிருந்த ஸம்ஸ்க்ருத பாடசாலையில் வியாகரணோபாத்யாயராக எழுந்தருளியிருந்தவர். ப்ரவசனகாலந்தவிர மற்ற காலத்தில் இந்த ஸ்வாமி ஒருவரோடும் வார்த்தை சொல்லாதே "மந்த்ரரத்நாநுஸந்தாநஸந்ததஸ் புரிதாதரம்" என்ற ஸ்ரீஸூக்தியை நினைப்பூட்டுவார்போன்று த்வயாநுஸந்தானைக நிரதராயிருந்துவந்ததை அடியேன் நேரிலறிந்தவன். அதனால் இவரை ருஷியென்று சொல்லிக்கொண்டிருந்தார்கள் அக்காலத்துப் பெரியோர். அடியேனுடைய திருத்தகப்பனார் இந்த ஸ்வாமியிடத்தில் வியாகரணம் வாசித்தார். இவர், ஔரஸபுத்ரரில்லாமையாலே ஸ்வீக்ருத புத்ரரால் புத்ரவானாயினர். அந்த புத்ரரத்னத்தின் ப்ரபாவத்தை அடுத்தபடியநுபவிப்போம். ... ... ... ❋

## 19. ஸ்ரீமதுபயவே. ஷஷ்டி. ஸ்ரீநிவாஸவரதாசார்யஸ்வாமி.

முன்னம் ப்ரஸ்துதரான ஷஷ்டி. கிருஷ்ணமாசாரியர்ஸ்வாமியின் ஸ்வீக்ருத குமாரர் இவர் என்பதைக் கீழே தெரிவித்திருக்கிறேன். இந்த ஸ்வாமி திருநாடலங்கரித்து இருபத்தேழு வருஷமாகிறது. இவர் வியாகரண சாஸ்த்ரத்திலும் தரும சாஸ்த்ரத்திலும் மஹாநிபுணர். அடியேனுடைய திருத்தகப்பனாரிடத்தில் காவ்யநாடகாலங்காரங்களைப் பரிபூர்த்தியாக அதிகரித்தவர் இவரொருவரே நெடுநாள் வாழ்ந்தவராக எனது நினைவுக்கு வருகிறார். வெகு அழுத்தமான வ்யுத்பத்தியுடையவர். ஸ்ரீமத் பரமஹம்ஸ. ஷஷ்டி ஜீயர் ஸ்வாமி ஸன்னிதியில் பகவத் விஷய ரஹஸ்யாதிகள் அதிகரித்து நல்ல வாக்மியாய் விளங்கினர். ஸ்ரீமதுபயவே. திருமலை ஈச்சம்பாடி. திருவேங்கடாசாரியர் ஸ்வாமிக்கும், திருமலைவிஞ்சிமூர். பாஷ்யகாரர் ஸ்வாமிக்கும் உசாத்துணையாயிருந்து தென்னாசார்யதர்சன நிர்வாஹகராயிருந்த பெருமையும் இவர்க்குள்ளது. இவர்க்கும் ஔரஸபுத்ரரில்லாமையாலே ஜ்யேஷ்டதௌஹித்ரனையே புத்ரவத் அபிமானித்திருந்தார். கோயில் கந்தாடை அண்ணன். ஜடப்ரோல் ராமாநுஜாசாரியர் ஸ்வாமியின் பௌத்ரனான அவனும் ராமாநுஜாசார்யனென்றே பெயர்பெற்று உபயவேத பாரங்கதனாய், "மிகுஞானச்சிறுகுழவி யென்று அனைவராலும் கொண்டாடப்பட்டவனாயிருந்து இளமையிலேயே ஆசாரியன் திருவடி சேர்ந்தது நினைதொறும் சொல்லுந்தொறும் நெஞ்சு இடிந்துகும். ... ❋

## 20. ஸ்ரீமதுபயவே. புரிசை கிருஷ்ணமாசார்யஸ்வாமி.

மேலே ப்ரஸ்துதரான ஷஷ்டி ஸ்ரீநிவாஸவரதாசார்யஸ்வாமியின் ஜநக குலத்திலே அவர்க்குக் கநிஷ்ட ஸஹோதரராகத்தோன்றின இந்த ஸ்வாமி திருமலை அனந்தாண்பிள்ளை வம்சத்தவராவர். புரிசை க்ருஷ்ணமாசாரியரென்றே வழங்கப்பெற்று வந்தார். இவரும் தமது திருத்தமையனரான ஷஷ்டி ஸ்ரீநிவாஸவரதாசாரியரோடு கூடவே அடியேனுடைய திருத்தகப்பனரிடத்தில் காவ்யநாடகாலங்காரங்கள் பயின்று, ஸ்ரீமத் குன்றபாக்கம் ஸ்வாமி ஸன்னிதியிலே நியாய வேதாந்தங்களையும் ஸ்வரூபக்ரந்தங்களையும் பரிபூர்ணமாக அதிகரித்து ப்ரபலவித்வானக விளங்கினர். திருமலை திருப்பதி தேவஸ்தான கலாசாலையில் பல வருஷங்கள் சாஸ்த்ரோபாத்யாயராக விளங்கிப் பல தேசத்தவர்களைப் பண்டித மணிகளாக்கினர். கலாசாலையில் விச்ராந்தி பெற்ற பிறகு திருவல்லிக்கேணியிலும் மாம்பலத்திலும் வாழ்ந்து ஸம்ப்ரதாயக்ரந்த ப்ரவசன நிரதராயிருந்து பதினைந்து வருடங்களுக்கு முன்பு திருநாடலங்கரித்தார். இவருடைய குமாரர்கள் லௌகிகோத் யோகங்களில் ப்ரதிஷ்டிதர்களாக விளங்கி வருகின்றார்கள். ... ... ❋

## 21. ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி. ஸ்ரீகோழியாலம்ஸ்வாமி.

ஏழெட்டு வருஷங்களுக்குமுன்பு திருநாடலங்கரித்தவரும் விச்வவிக்யாத ஜ்ஞான வைராக்ய நிதியுமான இந்த ஸ்வாமியை ஸ்ரீவைஷ்ணவவுலகம் முழுவதுமுணரும். ஸ்வாமியின் திருத்தகப்பனர் ஸ்வக்ராமவாஸத்தை விட்டு இருதிருக்குமாரர்களுடன் காஞ்சி வாஸமாக வந்து சேர்ந்து முதலில் எமது வீதியிலேயே ஸந்நிஹிதராகக் குடிவாழ்ந் திருந்த காலம் அடியேனுக்கு நன்றாக நினைவிலுள்ளது. கோழியாலம் ராகவாசார்யஸ்வாமி யென்று ப்ரஸித்தராயிருந்து தேவப்பெருமாள் ஸன்னிதி சடகோபநிலய பாடசாலையில் வித்யார்த்தியாக வந்து சேர்ந்து அங்கு வியாகரணோபாத்யாயராக இருந்த ஸ்ரீமத் கண்டாவதாராசார்ய ஸ்வாமியிடம் வியாகரண சாஸ்த்ரமதிகரித்து, பிறகு திருப்பதியில் கோபாலாசார்ய ஸ்வாமியென்று ப்ரஸித்தராய் மஹாஜ்ஞான நிதியாக எழுந்தருளியிருந்த உத்தமாச்ரமியையடிபணிந்து அத்யாத்ம சாஸ்த்ரங்களையதிகரித்து மஹாவாக்மியாய் விளங்கி, திருவஹீந்திரபுரத்தில் துரியாச்ரமஸ்வீகாரம் செய்துகொண்டு தக்ஷிணதிவ்ய தேசயாத்திரைகள் செய்து ஸ்ரீகாஞ்சியில் ஸ்திரவாஸமாக நெடுநாள் எழுந்தருளியிருந்தார். பூர்வாச்ரமத்திலும் உத்தமாச்ரமத்திலும் ஸ்வாமியோடு நெருங்கிப் பழகினவடியேன் ஸ்வாமியின் ஜ்ஞாநஸாம்ராஜ்யத்தை நன்கறிந்தவன்.

ஸ்வாமி மிகச்சிறந்த க்ராந்திகர். பரபக்ஷநிராக்ருதி முதலான சில க்ரந்தங்களை இயற்றி அச்சிட்டும் வெளியிட்டிருக்கிறார். அடியேனுடைய தன் சரிதையில் விஸ்தாரமாக ப்பலவிஷயங்கள் ஸ்வாமியைப்பற்றியெழுதியிருக்கிறேன். இங்கு ஸம்க்ஷேபமாகச் சில விஷயங்கள் தெரிவிக்கிறேன். ஸ்வாமி பூர்வாச்ரமத்தில் ஒரு நாளிரவு ஸன்னிதி வீதியில் அடியேனுக்கு (அகாண்டே) அபரிமித ப்ரஹாரங்கள் ஸமர்ப்பித்ததிலிருந்து பதினைந்து வருஷ காலம் ஸ்வாமி வெளியூர்களிலேயே ஸஞ்சரித்துக்கொண்டிருந்தார். பிறகு

காஞ்சீபுரத்திற்கெழுந்தருளி வடவண்டை மாடவீதியில் ஒரு க்ருஹத்தில் வாழ்ந்துவந்தார். அப்போது எமக்கு ஸாமாநாதிகரண்ய ப்ரஸக்தியில்லாமலேயிருந்தது. அந்த ஸ்வாமி தினப்படியாக அனுஷ்டானத்திற்கு வெள்ளக்குள மெழுந்தருள்வது வழக்கம். அடியேனும் அங்குத்தான் செல்வது. இருவரும் அடுத்தடுத்த துறையிலேதான் காலைக் கடன்களை முடிப்பது. அடியேன் 7 மணிக்குள் காரியங்களை முடித்துக்கொண்டு இராமானுசநூற்றந்தாதி யநுஸந்தானத்துடன் க்ருஹத்துக்குச் செல்வேன். ஸ்ரீஸ்வாமி 8 மணிக்குக் குளத்திலிருந்து புறப்படுவர். இங்ஙனே தினப்படியாக நாலாறு மாதம் நடந்துகொண்டிருக்கிறது. இப்படியிருக்கையில் ஒருநாள் அடியேன் அக்குளத்தில் வஸ்த்ரதாரண ஊர்த்வபுண்ட்ரதாரண ஸந்த்யாவந்த நாதிகளை முடித்துக்கொண்டு புறப்படுகையில் ஸ்ரீஸ்வாமிக்கு அநுஷ்டானம் ஸாவசேஷமாயிருந்தும் அடியேனைத் தொடர்ந்துகொண்டு புறப்பட்டார். அவரோடு ஸந்திக்க வேண்டாமென்கிற எண்ணத் துடன் சிறிது வேகமாகச் செல்லுகிறேன்; ஸ்வாமியோ ஸந்தித்து வார்த்தையாட வேணுமென்கிற திருவுள்ளத்துடன் மிகவும் விரைந்து எழுந்தருளுகிறார். வேகவதி ஸமீபத்தில் வந்து "அண்ணா! நிற்கவேணும், அண்ணா ஸ்வாமிந்! நிற்கவேணும்" என்று ஸாதித்துக்கொண்டே பக்கத்தில் எழுந்தருளியாயிற்று. அப்போது பட்டரை ஸ்ரீநிவாஸ வரதாசாரியர் என்கிற அத்யாபக ஸ்வாமி என்னோடுகூடவே க்ருஹத்துக்கு வருகிறார். கோழியாலம் ஸ்வாமி அவரை நோக்கி 'ஸ்வாமீ சீமாவரதாசாரியா!' என்றழைத்து 'இந்த வ்யக்தியினுடைய யோக்யதை தெரியுமா? *ந பூதோ ந பவிஷ்யதி*............ இத்யாதிகள் பலபல ஸாதித்துவிட்டு, 'ஸ்வாமீ! நாங்களிருவரும் ஏதோ வார்த்தையாட வேண்டியிருக்கிறது, தேவரீர் எழுந்தருளவேணும்' என்று ஸாதித்து அவரைப்போகவிட்டு, அடியேனிடம் பரமக்ருபாகனமான பல ஸ்ரீஸூக்திகளை "கண்டேந ஸ்வரகத்கதேந நயநேநோத்கீர்ணபாஷ்பாம்புநா" என்னும் நிலையிலே ஸாதிக்க ப்ராப்தமாயிற்று. அப்போது அந்த ஸ்வாமியால் பரபக்ஷநிராக்ருதியென்கிற க்ரந்தம் ஸாதிக்கப் பட்டிருந்தது. அதை அடியேன் மூலமாக அச்சிடுவிக்கவேணுமென்று குதூஹலமுண்டாகி அதற்குரிய நியமனம் ஸாதித்தாகிறது. "அரசாணிபாலை வேங்கடாத்வரி தான் செய்த லக்ஷ்மீஸஹஸ்ரத்தில் சொல்லுகிறார்; தேசிகனைக்கொண்டு பாதுகாஸஹஸ்ரம் அவதரிப் பித்துக்கொண்டது ஆச்சரியமன்று; என்னைக்கொண்டு லக்ஷ்மீஸஹஸ்ரம் அவதரிப்பித்துக் கொள்வதுதான் ஆச்சரியம் என்கிறார்; அதுபோல தேவர் நித்யம் ஒரு க்ரந்தம் அச்சுப் போடுவது ஆச்சரியமன்று; என்னுடைய க்ரந்தத்தைப் பரிஷ்கரித்து அச்சிட்டுத் தந்தால் அதுதான் ஆச்சரியமாகும்" என்று பலபலவும் ஸாதித்து 'ததாஸ்து' என்று சொல்லித் தாருகவேணுமென்று நியமனமாயிற்று. அதற்காக வேண்டிய பணத்தை திருக்குடந் தையில் ஒருவர் அனுப்பிக்கொடுக்க ஸித்தமாயிருக்கிறார்; அவருக்கு தேவரீருடைய விலாஸத்தை நான் தெரிவித்துமாயிற்று; நாளைக்கே பணம் வந்துவிடும்; இந்த கோரிக்கையை அவசியம் பூர்த்தி பண்ணித் தரவேணும்' என்றும் ஸாதித்தாயிற்று.

அந்த ஸந்தர்ப்பத்தில், பூர்வாச்ரமே அஸ்தாநே அகாண்டே ப்ரஹரித்த விஷயமும் ஸ்வாமிக்கு நினைவுக்குவந்தது. "ந ஸ்மரத்யபகாராணாம் சதமபி ஆத்மவத்தயா" என்பதை அநுகரித்து அடியேன் அதை ஒருகால் மறந்தாலும் ஸ்வாமி க்ருதஜ்ஞராகையாலே ஸ்வேந க்ருதமானதை மறக்கமாட்டாரன்றோ. அதனால் அதை நினைத்தருளி "அது ஜன்மாந்தரத்

தில் நேர்ந்ததென்று கொள்ளவேணும்; அதை மனதில் வைத்துக்கொள்ளவே கூடாது; ஆச்ரமஸ்வீகாரம் பண்ணின பிறகு காமக்ரோதங்களையெல்லாம் ஸவாஸநமாக விட்டிட்டேன்" என்றும் ஸாதித்தார். அந்த ஸமயத்தில் அடியேன் ஒன்று விஜ்ஞாபிக்கலாயிற்று; அப்போதைக்கு இரண்டு மூன்று மாதங்களுக்குமுன்பு புரட்டாசித் திருவோணத்தன்று விளக்கொளி தேசிகன் தேவப்பெருமாள் ஸன்னிதிக்கெழுந்தருளி மங்களாசாஸனம் செய்தான பிறகு தேசிகன் ஆழ்வார் திருவீதிவலமாக எழுந்தருள்வது வழக்கம். அப்போது உபயகலையாரும் ஸ்தோத்ரபாடம் சொல்லிக்கொண்டு தனித்தனி கோஷ்டியாய்ப்போவது வழக்கம். முன்னே தென்கலையாருடைய கோஷ்டியும் அதற்குப்பின்னே வடகலையாருடைய கோஷ்டியுமாகச் செல்வது. அப்போது இந்த ஸ்வாமி வடகலை கோஷ்டியில் அக்ரேஸரராக எழுந்தருளுகிறுர். தேசிகன் மணவாளமாமுனிகள் ஸன்னிதியருகே எழுந்தருளா நிற்கையில் இந்த உத்தமாச்ரமி என்ன செய்திருக்கிறுரென்ருல்—ஸ்தோத்ரம் ஸேவிக்கிற ஸ்வகீயர்களை 'நிறுத்துங்கள், நிறுத்துங்கள்' என்று கையையமர்த்தி நிறுத்தச் செய்து தாம் மணவாளமாமுனிகளுக்கு ப்ருஷ்டபாகத்தைக் காட்டிக்கொண்டு நின்று, "சொல்லுங்கோள்! உரக்கச் சொல்லுங்கோள்; *குரௌ வாதிஹம்ஸாம்புதாசார்யசிஷ்யே ஜநா பக்திஹீநா: யதீந்த்ராப்ரியாஸ் ஸ்யு:, யதீந்த்ராப்ரியாவிஷ்ணுகாருண்யதூரா: குதோ முக்திவார்த்தா ஹி தாத்ருக்விதாநாம்......*ஹந்த ஹந்த ராமக்ருஷ்ண தூஷணுபிதாயிநாம் கிம் நு சித்ரமத்ர சைத்யராவணுநுஸாரிணும்* என்று தாமும் கோஷிக்கிறுர், பிறரையும் கோஷிக்கச் செய்கிறுர். "இதெல்லாம் இப்போது ஏதுக்கு?" என்று சிலர் சொல்லவும் "உங்களுக்கென்ன தெரியும்? சொல்லுங்கோள்" என்று த்ரிதண்டத்தை வீசி ரோஷ கஷாயிதாக்ஷராய் நியமிக்கிறுர். இதையெல்லாம் அடியேன் எங்கள் கோஷ்டியிலிருந்து கொண்டு பார்க்கிறேன். அப்போது அங்கு கால்மணி காலம் இவருடைய அட்டஹாஸம் அளவுகடந்து சென்றது. இஃது அடியேனுடைய நினைவில் இருந்தபடியால் "ஆச்ரம ஸ்வீகாரம் பண்ணின பிறகு காமக்ரோதங்களையெல்லாம் ஸவாஸநமாக விட்டிட்டேனென்று இன்று ஸாதிக்கிற தேவரீர் ஆச்ரமஸ்வீகாரம் செய்தருளி 10 வருஷமாகிறது; இரண்டு மாதங்களுக்கு முன்னே இப்படியிப்படி நடத்தவில்லையா?" என்று கேட்டேன். அதற்கு ஸ்வாமி ஸாதித்தபடி—"இதை தேவரீர் கவனித்திருக்கமாட்டாதென்று நினைத்திருந்தேன்; *விச்வதச்சக்ஷுருத விச்வதோமுக:* என்று நினைக்கிறேன். வாஸ்தவந்தான்; இந்த பாஞ்ச பௌதிக பிண்டமுள்ளவரையில் காமக்ரோதங்கள் அவர்ஜநீயங்கள்தான்; அதையெல்லாம் மறந்துவிடவேண்டியது. இனி அப்படியெல்லாம் ஒன்றும் நேராது" என்று ஸாதித்து, தம்முடைய அந்த பரபக்ஷநிராக்ருதி க்ரந்தத்தை உடனே கொடுத்தனுப்பி, விரைவில் முத்ரணம் செய்வித்து முடித்துத்தரவேணுமென்று நியமித்தாயிற்று. அடியேனும் அந்த நியமனத்தைக் கூடிய த்வரையில் பூர்த்தி செய்தாயிற்று. ஆனல் அந்த ஸ்நேஹம் நீடித்திருக்கவில்லை. வாதவிவாத க்ரந்த சர்ச்சை ஸ்வாமிக்குமெனக்கும் அபரிமிதமாக நடந்திருக்கிறது. அடியேனுடைய பரபக்ஷப்ரதிக்ஷேப நூல்களில் ஸ்வாமியின் க்ரந்தங்களைப்பற்றின ப்ரத்யாக்யானங்களே மலிந்திருக்கும். பண்டிதவுலகம் அறியாததன்று. வேறு பிரகரணங்களில் அவற்றின் விவரணம் வெளிவரும். ...

# வைதிக மநோஹராவின் விளக்கம்.

**ஸ்ரீ உ. வே. மதுராந்தகம் வீரராகவாசாரியரேயன்று; மற்று எந்த ஆசாரியரும் விடை கூறலாம்.**

ஸ்ரீ ராமாநுஜன் 225ல் (பக்கம் 3ல்) மேலே குறித்த மதுராந்தகம் ஸ்வாமியின் திருநாமத்தை மகுடமாக வைத்து நாம் மூன்றரைபக்கம் எழுதி வெளியிட்டுள்ளதை அன்பர்கள் மீண்டு மொருமுறை வாசிப்பது. அதன் பிறகு ஸ்ரீ ரா. 226ல் (பக்கம் 27ல்) "எழுநூறும் எழுபத்தேழும்" என்று மகுடமிட்டு எழுதிவருகையில் "ஸ்ரீ மதுராந்தகம் வித்வானுக்காக ஸம்ஸ்க்ருதத்தி லெழுதப்பட்ட எழுபத்தேழு விஷயங்கள் ஸப்தஸப்ததிஸதர்த்தமாலிகா என்னும் பெயர்கொண்டு நமது வைநிக மநோஹரா பத்ரிகையில் (நெ. 160ல்) முடிவுபெற்று வெளிவந்துவிட்டது என்று எழுதியிருந்தோம். வடமொழியில் விசேஷ பரிசயமில்லாதவர்கள் பலர் அவ்விஷயங்களைத் தமிழில் விளக்கி உபகரிக்கவேணுமென்று எழுதியிருந்தபடியால் அவற்றின் ஸாராம்சம் ஈண்டு உபகரிக்கப்படுகிறது. வேதாந்தவாசிரியர் பணித்த ஸ்ரீ ரஹஸ்யத்ரயஸாரத்தில் ஸித்தோபாய சோதநாதிகாரத்தில்–"இப்படி மத்யஸ்த த்ருஷ்டியாலே ப்ராமாணிகார்த்தங்கள் தோற்றச்செய்தே பற்றினது விடா தொழியில் *த்ருடபூர்வச்ருதோ மூர்க்கோ தர்மாணுமவிசாரத:, வ்ருத்தாந் அப்ருச்சந் ஸந்தேஹாந் அந்த: ச்வப்ரமிவர்ச்சதி, அந்யதா மந்தபுத்தீநாம் ப்ரதிபாதி துராத்மநாம், குதர்க்கவ்யாலதஷ்டாநாம் விப்ராந்தேந்த்ரியவாஜிநாம்* என்கிற தசையாம்" என்று தரப்பட்ட தூஷணைகள் ஸர்வாத்மநா அஸ்தாநே; ஸ்வாத்மந்யேவ அந்வயிக்கக்கூடிய தூஷணங்கள் இவை என்பது ஸாரமான விஷயம். *த்ருடபூர்வச்ருதோ மூர்க்க:* இத்யாதி ச்லோகத்வயம் ஆசிரியருடைய ஸொந்தமான கவிதையன்றாகிலும் அதை யெடுத்துக்காட்டினது அஸ்தாநே– என்பது விஷயம். மேலே குறித்த வைதிக மநோஹரா ஸஞ்சிகையில் (பக்கம் 4ல்) "பகவத்யாமுநார்ய திவ்யஸூக்தி திவ்யார்த்தாநுபவ:" என்கிற [எட்டாவது வாக்யச்ரேணி தொடங்கி (பக்கம் 19ல்) ஐம்பத்தெட்டாவது வாக்யச்ரேணியளவும் இந்த சர்ச்சையுள்ளது. அஃது இங்கு விசதீகரிக்கப்படுகிறது. (முன்னுரை முற்றும்).

1. ஆளவந்தார் அருளிச்செய்த சதுச்ச்லோகியில் மூன்றாவது சுலோகத்தில் *ச்ரேயோ ந ஹ்யரவிந்தலோசநமந:காந்தாப்ரஸாதாத் ருதே ஸம்ஸ்ருத்யக்ஷரவைஷ்ணவாத்வஸு ந்ருணும் ஸம்பாவ்யதே கர்ஹிசித்* என்பது உத்தரார்த்தம். மோக்ஷபர்யந்தமான எல்லாப் பேறுகளும் பிராட்டியின் அநுக்ரஹத்தாலல்லது ஸம்பவிக்கமாட்டாதென்பது இதன் பொருள். இவ்விடத்தில் ஒருசங்கை யுண்டாகும். (அதாவது) அபார காருண்ய வாத்ஸல்யாதி ஸகல ஸத்குண நிதியான எம்பெருமான் இடர்களைக் களைந்து இன்பங்களை யளிக்கவல்லவனா யிருக்க அவனுடைய அனுக்ரஹத்தினாலாகாதது ஒன்றுண்டோ? பிராட்டியின் அநுக்ரஹம்

எதற்காக? என்று; இங்கு இந்த சங்கையைத் தோன்றுவித்து நிகமாந்த குருவரர் அந்தச்லோகத்தின் பாஷ்யத்திலும் வேறிடங்களிலும் பரிஹார முணர்த்தியுள்ளார். "நநு மோக்ஷப்ரதத்வம் பகவத ஏவேதி ஸர்வத்ர ஸ்தாபிதம்" என்று தொடங்கி சங்கையை உத்க்ஷேபித்து 'மைவம்' என்று தொடங்கி தத்பரிஹாரம் பண்ணியுள்ளார். ப்ரக்ருத ச்லோகபாஷ்யத்தின் முடிவில் நிஷ்கர்ஷம் செய்தருளின ஸ்ரீஸூக்தி கேண்மின். "மோக்ஷப்ரதே பகவதி முமுக்ஷூணும் கடகதயா ஏஷா திஷ்டதீதி ஸர்வஸம்மதம்" என்பது முதல்வாக்கியம். இதன் பொருளாவது, மோக்ஷமளிப்பவன் எம்பெருமானே; பிராட்டியோவென்னில், புருஷகாரபூதையாயிருக்கிருளென்பது யாவருமிசைந்தது—என்பதாம்.

2. (அந்த சதுச்ச்லோகியில்தானே) இரண்டாவது சுலோகத்தில் மோக்ஷப்ரதாநப்ரஸ்தாவமே யில்லாதிருக்கவும் ஆநுஸங்கிகமாகக் கொண்ட விசாரத்தில் ஸ்வாமிதாமே காரிகையொன்று இட்டருளினர்; (அதாவது) * அஸ்தி கர்மார்ஹ பலதே பத்யௌ க்ருத்யத்வயம் ச்ரிய:, நிக்ரஹாத் வாரணம் காலே ஸந்துக்ஷண மநுக்ரஹே.* என்பதாம். இதன்பொருளாவது, கர்மாநு ரூபமாகப் பேறு பெறுவிக்குமவன் எம்பெருமானே; பிராட்டி தான் இரண்டுக்ருத்யங்களை வைத்துக் கொள்ளுகிருள்; அவன் நிக்ரஹிக்கும்போது அதைத் தடுப்பதும், அநுக்ரஹிக்கும் போது அதை மேன்மேலும் வளரச்செய்வது மென்கை. அதற்குமேல் "அத்ர வரத குருபதேசஅநுஸாரிபி: வ்யாஸார்யைச் ச உக்தம்—ப்ரதாபோஷ்மல பித்ருத்வ துராஸத பகவத் ஸமாச்ரயண ஸித்தயே புருஷகாராநுப்ரவிஷ்ட வாத்ஸல்ய நிர்ப்பரலக்ஷ்மீ ஸமாச்ரயணம் ஸ்ரீமச்சப்தவிவரணமுகேந அபிதீயதே." என்றருளினர் நிகமாந்த குருவரர்தாமே. மேலெடுத்தவாக்யத்தில் வ்யாஸார்ய ரென்னப்பட்டவர் ச்ருதப்ரகாசிகாபட்டர்; அவர்க்கு வரதகுருபதேசாநுஸாரித்வ விசேஷணமிட்டதனுல் ஸத்ஸம்ப்ரதாயசுத்தி காட்டப்பட்டதாயிற்று. தேசிகன் தமக்குப்ராசார்யரான நடாதூரம்மாள் உபதேசித்தயதார்த்தமான அர்த்தத்தையே அவருடைய திருவடியான ச்ருதப்ரகாசிகாபட்டர் பொறித்துவைத்தாரென்று தெரிவித்தபடி. ச்ருதப்ரகாசிகாபட்டர் பொறித்துவைத்ததென்னவென்ருல்; எம்பெருமான் வாத்ஸல்யாதி குணநிதியாயிருக்கச் செய்தேயும் சீற்றங்கொள்ளும்படியான பிதாவாயுமிருக்கையாலே அணுகவொண்ணுதபடியாகவுமிருக்க நேருமாகையாலே அணுகுவிப்பதற்குப் பாங்கான தண்ணளிவாய்ந்த பிராட்டியைப் புருஷகாரமாக வரிப்பது ஸ்ரீமச்சப்தவிவரணமுகத்தாலே சொல்லப்படுகிறது என்பதாம். *லக்ஷ்மீ: புருஷகாரத்வே நிர்திஷ்டா பரமர்ஷிபி:, மமாபி ச மதம் ஹ்யேதத் நாந்யதா லக்ஷணம் பவேத்* என்கிற பிரமாணத்தை மீறி ஒரு ஆசார்யரும் அருளிச் செய்யாரன்ரே. நீரிலே நெருப்புக் கிளருமாபோலே குளிர்ந்த திருவுள்ளத்திலே அபராதத்தாலே சீற்றம் பிறந்தேதீரும்; அப்போது நிர்ப்பயமாக அணுகுவதற்குப் பிராட்டியின் புரஸ்கரணம் இன்றியமையாதது; ஆனதுபற்றியே * ச்ரேயோ ந ஹ்யரவிந்த லோசந மந:காந்தாப்ரஸாதாத் ருதே * இத்யாதியை ஆளவந்தார் அருளிச்செய்தது பொருத்தம்—என்னுமிதுவே தேசிகருடைய நிஷ்கர்ஷம். பிராட்டி மோக்ஷமளிக்கிருளென்ரே அளிக்கவல்லவளென்ரே தேசிகர் ஓரிடத்திலும் பணித்ததில்லை. பணித்ததில்லை, பணித்ததில்லை.

3. மேலேகுறித்த ச்ருதப்ரகாசிகாபட்டருடைய ஸ்ரீஸூக்திக்கும் முன்னே "உக்தஞ்ச ஸ்ரீவிஷ்ணுசித்தை: கத்யவ்யாக்க்யாநாரம்பே; மாத்ருத்வைகரூபாம் ச்ரியம் ப்ரபத்யதே; மாதா ஹிதாதபி புத்ரஸ்ய ப்ரியமேவ பச்யதி. பிதா து உபயம் பச்யதி. அதோ தண்டதரத்வ ஹீநதைவ அவலம்பநம் அஸ்யாம் தசாயாம் ஆஸீத் இதி." என்று எங்களாழ்வான் ஸ்ரீஸூக்தியையு மெடுத்துக்காட்டினர் நிகமாந்த குருவரர். வாத்ஸல்யாதிகளைப்போலே தண்டதரத்வமுமுடைய எம்பெருமானை யணுகுவதற்கு *நித்யமஜ்ஞாத நிக்ரஹையான பிராட்டியைப் புரஸ்கரிக்கவேண்டி யது அவசியமாகிறது—என்பதையே ஒவ்வோராசார்யரும் அருளிச்செய்துவைத் தார். எங்களாழ்வானுடைய ஸ்ரீஸூக்திக்குமுன்னே பட்டருடைய ஸ்ரீகுணரத்ந கோச ஸ்ரீஸூக்தியையும் உதாஹரித்தார்—"ஆஹுச் ச * பிதேவ த்வத்ப்ரேயாந் இத்யாரப்ய * மாதா ததஸி ந: * இதி." என்று. இவ்வளவோடும் ஓய்ந்திலர்; உடனே "ஏவம் அநப்யுபகமே தாம் புரஸ்க்ருத்ய பகவதபிகமநமபி தத்ரதத்ரோக்தம் துஸ்ஸ்தம் ஸ்யாத்" என்று மருளிச்செய்தார். இதன் பொருள் தெரியுமோ? தண்டதரனன எம்பெருமானுடைய சீற்றத்தையாற்றுதற்குப் பிராட்டியைப் புருஷ காரமாகக் கொள்ளவேணுமென்று இசையாதொழியில் ஆங்காங்கு சாஸ்த்ரங் களில் பிராட்டியைப் புரஸ்கரித்து எம்பெருமானை ஆச்ரயிக்க வேணுமென்று கூறி யிருப்பது பொருந்தாமற்போகும்-என்கை. இஃதொன்றுபோதும் தேசிகனுடைய திருவுள்ளத்தையுணர.

4. இதே கெட்டத்தில்தான் (கீழே உதாஹரித்த) * அஸ்தி கர்மார்ஹ பலதே பத்யௌ க்ருத்யத்வயம் ச்ரிய:. நிக்ரஹாத் வாரணம் காலே ஸந்து க்ஷண மநுக்ரஹே * என்னும் ஸ்வகீய காரிகையை இட்டருளினர். இந்த காரிகையானது ப்ரக்ருதவிஷயத்தில் தோன்றும் ஸகலஸந்தேஹங்களையும் வேரறுக்கவல்லதன்றோ. பிராட்டியின் இத்தகைய இரண்டு க்ருத்யங்களைத் திருவுள்ளம்பற்றியே ஆளவந்தார் * ச்ரேயோ நஹ்யரவிந்த லோசந......* இத்யாதியை யருளிச் செய்தாரென்று தேசிகனுடைய பாஷ்ய நிகமனம்.

5. மீண்டும் ஸாரமாகக் கேளீர்—அவ்விடத்து பாஷ்யத்தில் "நநு மோக்ஷப்ர தத்வம் பகவத ஏவேதி ஸர்வத்ர ஸ்தாபிதம்" என்று தாம் உத்க்ஷேபித்த ஆசங்கை யைப் பரிஹரிக்குமிடத்து "மோக்ஷப்ரதே பகவதி முமுக்ஷூணாம் கடகதயா ஏஷா திஷ்டதீதி ஸர்வஸம்மதம்" என்றருளிச்செய்ததுண்டே, இஃதொன்று போதாதா நவீனர்கள் தெளிவதற்கு? இதற்கு அடுத்த வாக்யமும் கேளீர்— "பரிபூர்ணநுபவ ப்ரதாந ஸங்கல்பஸ் து பகவத: ஸ்வஸ்யைவ வா ஸபத் நீகஸ்ய வா இதி யதாப்ரமாணம் பவது" என்று. ப்ரமாணஸாகரபாரங்கதரான தேசிகர் ப்ரமாண பரிசீலநபூர்வகமாகவும் ஆசார்யோபதேசாநுஸாரமாகவும் ஸித் தாந்தப் பொருளைத் தாம் விவரியாதே "யதாப்ரமாணம் பவது" என்றது என்? என்கிற விசாரம் நாம் செய்யத்தக்கதன்று. உள்ள வாக்யத்தை விமர்சிப்போம்; பலனளிப்பவன் பலப்ரதான ஸங்கல்பம் செய்யவேண்டியவன்—எவன் பலனளிப்ப வனே அவன் ஸங்கல்பகர்த்தாவாவன். ப்ரக்ருதமான மோக்ஷப்ரதானத்தில் ஸங்கல்பக்ருத்யாதிகாரியை விமர்சிக்கின்ற தேசிகன் "ஸங்கல்ப: பகவத: ஸ்வஸ்

யைவ வா? பத்ந்யா அபி வா? என்று விகல்ப சரீரத்தை வைத்திலர் என்பது முக்கியமாகக் குறிக்கொள்ளத்தக்கது.

6. நியாயஸித்தாஞ்ஜனத்தில் * இயம் கேவலலக்ஷ்மீசோபாயத்வரூத்யயாத்மிகா, ஸ்வஹேதுத்வதியம் ருந்தே * என்கிற ஸ்வாமியின் காரிகையானது ஆபத்தியின் உபாயத்வத்தைமட்டும் தவிர்ப்பதன்று; பிராட்டியின் உபாயத்வத்தைத்தான் முந்துற முன்னம் தவிர்பபது. பிராட்டிக்கும் உபாயத்வ முண்டென்று திருவுள்ளத்திலோடியிருந்தால் *லக்ஷ்மீததீசோபாயத்வரூத்யயாத்மிகா* என்றன்றோ வசனவ்யக்தி வெளிவந்திருக்கும். இச் சிறுவிஷயத்தையும் க்ரஹிக்கமாட்டிற்றிலரென்றால் 'ந தே நிரஸநீயா: அபி து சோசநீயா:'.

7. ஸம்ஸ்க்ருத நூல்களில் இங்ஙனே விமர்சித்து விளக்கியருளின தேசிகன் சில்லரை ரஹஸ்யங்களில் பணித்தவையும் பாரீர்; – ரஹஸ்ய ரத்நாவளி யென்றும் அதன் ஹ்ருதயமென்றும் இரண்டு ரஹஸயங்கள் ப்ரஸித்தம். முப்பது வாக்யங்கள்கொண்ட ரஹஸ்ய ரத்நாவளியில் நான்காவது வாக்கியம்—''ஸர்வஸ்வாமிநியாய் ஸர்வேச்வரனுக்கு சேஷமாய் ஸஹதர்மசாரிணியான பெரிய பிராட்டியார் இத்தலையில் வாத்ஸல்யாதிசயத்தாலும் அத்தலையில் வால்லப்யாதிசயத்தாலும் புருஷகாரமாய்க்கொண்டு இஜ்ஜீவர்களுக்குத் தஞ்சமாகிருள். இவளைப் புருஷகாரமாக்கவேண்டுகிறது ஈச்வரன் தண்டதரனாகையாலே" என்று பிள்ளைலோகாசார்யருடைய முமுக்ஷுப்படி முதலான ரஹஸ்யச்சாயையிலே பணித்துவைத்தார். இதன் விவரணமான ரஹஸ்ய ரத்நாவலீ ஹ்ருதயத்தில் விசேஷமுள்ளது; (அஃதென்ன வென்னில்;) ''இஜ்ஜீவர்களுக்குத் தஞ்சமாகிருள்'' என்றதற்கு–''பவேயம் சரணம் ஹி வ:* என்றருளிச்செய்தபடியே இவர்களுக்கு ரக்ஷாஹேதுவாகிருளென்றபடி" என்று விவரணம் காட்டினர். ரக்ஷகத்வமும் ரக்ஷாஹேதுத்வமும் பர்யாயமன்று. ஈச்வரனை ரக்ஷாஹேதுவென்று யாரும் சொல்லுவதில்லையே. இது இவர்கள் மதியிலேறுமா?

8. ஆகவிப்படி விசதமாக நிரூபிக்கப்பட்ட விஷயங்கள் ப்ரமாண சரணர்களின் உள்ளத்தில் நன்கு பதிந்திருக்கவேணும். பிராட்டிதிறத்தில் இங்ஙனம் உபபாதனங்கள் செய்தருளின ஸ்வாமி தாமே ரஹஸ்யத்ரயஸாரத்தில் ஸித்தோபாய சோதநாதிகாரத்தின் முடிவில்—''இப்படி மத்யஸ்த த்ருஷ்டியாலே ப்ராமாணிகார்த்தங்கள் தோற்றச்செய்தே பற்றினது விடாதொழியில் *த்ருடபூர்வச்ருதோ மூர்க்க..............மந்தபுத்தீநாம் துராத்மநாம் குதர்க்க வ்யாலதஷ்டாநாம் விப்ராந்தேந்த்ரிய வாஜிநாம்* என்கிற தசையாம்'' என்கிற பரமபாவந பரமபோக்ய-திவ்ய ஸ்ரீஸூக்திமாலிகையை இட்டருளியுள்ளார். இந்த வாக்யராசியைப்பற்றி முப்பது நாற்பது வருஷகாலமாக ப்ரபல சர்ச்சை செய்துவருகிறோம். மத்யஸ்த த்ருஷ்டியாலே ப்ராமாணிகமாகத் தோற்றினதாகத் தாம் அபிமானிக்கும் அர்த்தங்கள் எவை? *த்ருடபூர்வச்ருதோ மூர்க்க: இத்யாதி ஸத்கார யோக்யர்களாகத் தாம் கொண்ட க்ருஹீதக்ராஹிகள் பெரியோர்களைப் பணிந்து கேளாமல் மூர்க்கத்தனமாகச் சொல்லிவரும் அர்த்தங்கள் எவை? என்றிவ்வளவே நமது கேள்வி. அந்தப்ரகரணத்தில் அவர் தாம் முன்னே நிருபித்த அர்த்தங்கள் எவை யென்று பார்த்து விடையிறுக்கவேண்டிய விஷயமிது. *த்ருடபூர்வச்ருத ஸத்காரத்திற்கு

முன்னேயுள்ள நிருபணங்களிவை—"அலமேஷா பரித்ராது மென்று ஸ்ரீ வால்மீகி பகவான் சரணுகதிஸாரமான ஆதிகாவ்யத்திலே நிபந்தித்தான். *ஸம்ஸாரார்ணவ தாரிணீ மென்று ஹிரண்யகர்ப்பகாச்யபாதிகளும் சொன்னர்கள். *வாச: பரம் ப்ரார்த்தயிதா ரூபத்யேத் நியத: ச்ரியம்* என்று ஸ்ரீ சௌநகபகவான் விதித்தான். *ஆத்மவித்யா ச தேவி த்வம் விமுக்திபலதாயிநீ* என்று.........ஸ்ரீ பராசரப்ரஹ்மர்ஷி யருளிச்செய்தான். ச்ரிய:பதிதானும் *யாமாலம்ப்ய ஸுகேநேமம் துஸ்தரம் ஹிகுணோததிம், நிஸ்தரந்த்யசிரேணைவ வ்யக்தத்யாநபராயணா:* என்று ஸ்ரீஸாத்வதஸம்ஹிதையிலே ஸ்ரீபதிருபத்யாநத்திலே யருளிச்செய்தான். ஆளவந்தாரும் *ஜகத் ஸமஸ்தம் யதபாங்கஸம்ச்ரயம்* என்றும் *ச்ரேயோ ந ஹ்யரவிந்த.......... ஸம்பாவ்யதே கர்ஹிசித்* என்று மருளிச்செய்தார். ஸ்ரீ பாஷ்யகாரரும் ஸ்ரீ வைகுண்டகத்யத்திலே *சேஷசேஷாசநாதி.......ஆஜ்ஞாபயந்த்யா* என்று பகவத் கைங்கர்யருப பரமபுருஷார்த்தம் இவள் நியோகத்தின்படியே நடத்தவேணுமென்றருளிச்செய்தார். கூரத்தாழ்வானும் *ஸ்வஸ்தி ஸ்ரீர் திசதாத்.......* என்று ஸங்க்ரஹித்த அர்த்தத்தை *தேவி! த்வந்மஹிமாவதி...என்று தொடங்கி விஸ்தரித்தார். பட்டரும் *ஐச்வர்யமக்ஷரகதிம் பரமம் பதம்வா.........என்று ச்ருதியிலுதார சப்தத்துக்கு வியாக்கியானம் பண்ணினுர். ஸ்ரீஸூக்தபாஷ்யத்திலே பெரிய ஜீயரும் அபேக்ஷிதார்த்தங்களெல்லாம் உபபாதித்தார். இப்படி ச்ருதிஸ்ம்ருதி ஸம்ப்ரதாயம் நிற்கிற நிலைகளைக்கொண்டு ஸ்ரீமச்சப்தத்திற் சொன்ன விசேஷணத்துக்கு விக்ரஹாதிகளுக்குப்போலே வஸ்த்வநுரூபமான உபயோக விசேஷங்களை ஸஹ்ருதயர் அறிந்துகொள்வது." என்றித்தகைய வாக்யராசிகள் போகின்றன.

9. மேலெடுத்த ப்ரமாணங்களினிடையிலே *ஜகத் ஸமஸ்தம் யதபாங்கஸம்ச்ரயம்* என்கிற ஸ்தோத்ரரத்நஸூக்தியும் *ச்ரேயோ ந ஹ்யரவிந்த....... இத்யாதி சதுச்ச்லோகீஸூக்தியும் உதாஹரிக்கப்பட்டுக் காண்கின்றன. சதுச்ச்லோகீபாஷ்யஸூக்திகள் கீழே விசதீகரிக்கப்பட்டனவே; *ஜகத்ஸமஸ்த மித்யாதியின் பொருள் ஸ்தோத்ரபாஷ்யத்தில் வ்யக்தம். மேலெடுத்துக்காட்டிய ப்ரமாணங்களினுல் விளங்கும் பெருமை பெரிய பிராட்டியார்க்கு இல்லை யென்பார் ஸ்ரீ வைஷ்ணவ ஸந்தானத்தில் ஆரேனுமுளரோ? ஜாத்கவாதி வாக்யார்த்தமன்றோ இவை.

"*தபஸ்ஸ்வாத்யாய நிரதமென்று வால்மீகி சொன்னுர்; *மந்த: கவி யச: ப்ரார்த்தீ என்று காளிதாஸன் சொல்லிவைத்தான். *நிஷ்ப்ரத்யூஹமுபாஸ்மஹே என்று வேதாந்த பரிசயமுள்ள பட்டமுராரியும் பணித்தான். *ஸ ச ஸமரகர்ண்ய ஸகலாம் ப்ரவ்ருத்திம்* என்று ஸ்ரீ ராமாயண ஸங்க்ரஹத்திலும் அறுதியிட்டு வைத்தார்கள். ஞாயிறுதோறும் மாலைவேளையிலும், திங்கள்தோறும் காலைவேளையிலுமே ராஹுகாலமென்று காலதர்ப்பணத்தில் ஸுஸ்புஷ்டம்."

என்பவற்றேடு மேலே குவித்த வசனராசிகளோடு ஒரு வாசியுண்டோ? சதுச்ச்லோகீபாஷ்யம் ரஹஸ்ய ரத்நாவளி முதலான ஸ்வகீய க்ரந்தங்களில் தாமே உபபாதித்த அர்த்தங்களுக்கு இங்கே கண்டனமா? மண்டனமா? என்பதொன்றே கேள்வி. கண்டனமேயொழிய மண்டனமன்றென்பதுகல்வெட்டு.

10. மற்றொன்றுங் கேளீர்; அந்த ஸித்தோபாயசோதநாதிகாரத்திலேயே– "ஸபத்நீகனைக் கொண்டு ஸர்வரக்ஷணயஜ்ஞதீக்ஷிதனை ஸர்வேச்வரனுக்கு ஸ்ரீமச் சப்தத்திலே சொல்லுகிற பத்நீ ஸம்பந்தத்தில் வரும் கலக்கங்களுக்கு திங்மாத்ரத்தாலே பரிஹாரம் காட்டுகிறோம்: சிலர் த்வயத்தில் பூர்வ கண்டத்தில் ஸ்ரீமச் சப்தம் உபலக்ஷணபரமென்றும், உத்தர கண்டத்தில் ஸ்ரீமச் சப்தம் விசேஷணபரமென்றும் பிரியச் சொன்னார்கள். இவ்விடத்தில் சப்தம் ஏகரூபமாயிருக்க ஸ்வாரஸ்யத்துக்கு பாதகமுமின்றிக்கேயிருக்க....கூடஸ்தஸம்ப்ரதாய விருத்தமாகப் பண்ணுகிற இவ்விபாகம் அநுபபந்நம்.'' இத்யாதி யெழுதியுள்ளார். இந்த விசாரம் அகாண்டே அஸ்தாநே தோன்றியது. ரஹஸ்யத்ரயஸார வ்யாக்யாதாவான ஸ்ரீமத் இஞ்சிமேட்டழகியசிங்கர் இதைத் தெரிந்து கொண்டு தமது வியாக்கியானத்தில் காட்டியுள்ளார். உபலக்ஷணத்வ விசேஷணத்வ விபாக கதை வ்யபதிஷ்டரான ஒரு ஆசார்யருடையவும் நூலில் காண்பதன்று. இத்தகைய விபாகத்தினால் ஒருவர்க்கும் ஒரு ஸமீஹிதமும் ஸித்திப்பதன்று. "த்வய பூர்வ கண்டத்தில் ச்ரிய:பதிக்கு ஆச்ரயணமே யொழிய ஸ்ரீக்கு 'ஆச்ரயணமில்லை'' என்று எந்த ஆசிரியர்க்காவது விவக்ஷையிருந்தாலன்றோ உபலக்ஷணத்வ ப்ரஸ்தாவமுண்டாகும். அஷ்டச்லோகியில் த்வயார்த்த விவரண ச்லோகத்தில்— *ஈசாநாம் ஜகதாம் அதீசதயிதாம் நித்யாநபாயாம் ச்ரியம் ஸம்ச்ரித்ய, ஆச்ரயணோசிதாகில குணஸ்ய அங்க்ரீ ஹரேராச்ரயே, இஷ்டோபாயதயா* என்று பூர்வ கண்டத்தை விவரித்து, மேல் * ச்ரியா ச ஸஹிதாய ஆத்மேச்வராயார்த்தயே கர்த்தும் தாஸ்யமசேஷம் அப்ரதிஹதம் நித்யம் த்வஹம் நிர்மம:* என்று உத்தர கண்டத்தையும் விவரித்தருளியுள்ள பட்டரை யடியொற்று மாசாரியர்களில் ஒருவரும்-பிராட்டியை ஆச்ரயிப்பது இல்லை யென்றாவது ப்ரஹ்மசாரி நாராயணனையே ஆச்ரயிப்பதென்றாவது சொல்லுவாரில்லையே.

11. எம்பெருமானார் சரணாகதிகத்யம் தொடங்கும்போதே *பகவந்நாராயணே த்யர் தியான பெரியசூர்ணையினால் பெரிய பிராட்டியாரையே சரணம்புக்கார். இது புருஷகார ப்ரபத்தியென்பது ஸர்வாசார்ய நிர்விவாதம். இங்கு ஸ்வாமி தமது பாஷ்யோபக்ரமத்தில் "க்ருத்ஸ்நமிதம் கத்யம் த்வயவிவரணமிதி ஸாதீயாந் ஸம்ப்ரதாய:; இஹ ச பகவத்ப்ரபதநே ஸமுத்யதஸ்ய புருஷகார புரஸ்காராதிகம் பூர்வ க்ருத்யம்; ஸாங்கஸ்வரக்ஷா பரஸமர்ப்பணம் தத்காலக்ருத்யம்;........." இத்யாதி வாக்யங்களை மிகத் தெளிவாக அருளியுள்ளார். இதில், ப்ரபத்திசெய்பவனுக்கு மூன்று க்ருத்யங்களும் சரண்யனுக்கு மூன்றுக்ருத்யங்களும் வகுக்கப்பட்டுள்ளன. ப்ரபத்திபண்ணுமவனுடைய முதல் க்ருத்யமாகச் சொல்லப்பட்டதை மட்டும் குறிக் கொண்டால் போதும். புருஷகார புரஸ்கரணமே அவனுக்கு முதல் க்ருத்யமாகக் கூறப்பட்டது. இதுதான் த்வயமந்த்ரத்தில் ஸ்ரீமச் சப்தநிர்திஷ்டமென்பதையும் திருவுள்ளம்பற்றியுள்ளார். "ச்ரியம் ப்ரபத்யே". "ச்ரியம் ப்ரபத்யேத" எனவருமிடங்களிலெல்லாம் புருஷகாரப்ரபதநம் தவிர வேறொன்றும் விவக்ஷிதமன்றென்பதை மிதமதிகளும் எளிதிலுணர்வர். "லக்ஷ்மீர் ததாதி; ஸ்ரீ: விதரதி" என்றாப் போலே ஆயிரமிடங்களில் சொன்னாலும் புருஷகாரக்ருத்யத்தினால் கொடுப்பிக்கை யொழிய வேறொன்றும் சொல்லிற்றாகாது. புருஷகாரத்வமென்பது ஶாவபிதரகவத்

திற்காட்டிலும் வேறுபட்டதன்ருகையாலே அலம் விஸ்தரேண. ஏதாவதா முடிந்த தென்னவென்ருல், பிராட்டி திறத்தில் ஸத்ஸம்ப்ரதாய ஸரணியையநுஸரித்து இதர க்ரந்தங்களில் தாமே செய்தருளின நிஷ்கர்ஷத்திற்கு நேர்மாருக, திகைப்பூண்டை மிதித்தவன் விபரீதஸாமநம்பண்ணுங்கணக்கிலே பொருளற்ற சில வசனங் களை அடுக்கியிட்டு ஸதாசாரியர்களை அஸ்தாநே திட்டத்தொடங்கிருரென்பது தான் கல்வெட்டாகத் தேறிநின்றது. இது பேர்க்கவும் பேராதபரமார்த்தவார்த்தை.

12. கவிதார்க்கிக ஸிம்ஹ ஸர்வதந்த்ரஸ்வதந்த்ரரான மஹாசார்யர் தாம் நிஷ்கர்ஷித்த அர்த்தத்தைத் தாமே மறுக்கிருரென்ருல் இது விச்வஸநீய மாகுமோ! என்னவேண்டிவரும். யாதவாப்யுதய ப்ரதமஸர்க்காவஸானத்தில் ஸர்வ தந்த்ரஸ்வதந்த்ர பதத்தை வியாக்கியானிக்கின்ற அப்பயதீக்ஷிதர் "ஸர்வேஷு தந்த்ரேஷு—ஸித்தாந்தேஷு, ஸ்வதந்த்ரஸ்ய—ஸ்வேச்சயா கஞ்சித் அர்த்தம் ஸ்தாபயிதும் தூஷயிதும் வா ஸக்தஸ்ய" என்றெழுதிவைத்தார். ஸ்வாமி தாமும் ரஹஸ்யத்ரயஸாரத்திலேயே, "தர்க்க பாண்டித்யத்தாலே நினைத்ததெல்லாம் ஸாதிக்கவல்லோம்" என்கிருர். மேலே ப்ரமாணஸரணராய்ப் போருகிருேமென் றிருக்கிறதேயென்பீர்கள். தர்க்க பாண்டித்யத்தாலே நினைத்ததெல்லாம் ஸாதிக் கத் தமக்கு வல்லமையுள்ளதென்பதை ரஹஸ்யக்ரந்தத்திலா எழுதிவைப்பது? அது உக்திமாத்ரமாய்ப் போகாமே க்ரியா பர்யவஸாயி யாகவுமன்ருே ஆயிற்று. தாமே ஸ்தாபித்ததைத் தாமே நிரஸித்தருளுகிருரென்பது இவ்வொரு விஷயத்தி லன்றே. இன்னமும் பலகேண்மின்.

13. ப்ரபத்தி உபாயமன்றென்பதை ஸ்ரீஸூக்திஸதங்களாலே ஸ்தாபித்து வைத்து அநுபாயமென்ற ஆசாரியர்களை அதிவாதிகளென்று க்ஷேபிக்கவில்லையா? ஆளவந்தாரருளிய கீதார்த்த ஸங்க்ரஹத்தில் *நிஜகர்மாதி பக்த்யந்தம் குர்யாத் ப்ரீத்யைவ காரித:, உபாயதாம் பரித்யஜ்ய ந்யஸ்யேத் தேவே து தாம் அபீ:.* என்னும் சுலோகத்தின் ரக்ஷையில்—"முக்தவ்யாபாரந்யாயேந ஸ்வயம் ஸ்வாதுத் வாத் க்ஷணிகஸ்ய காலாந்தர [illegible] [illegible] இத்யாதிஸூக்திகள் சேதநக்ரியாகலாபத் தில் ஸாதநத்வ ப்ரதீதிவ்யவஹாரங்களை அணுமாத்ரமும் ஸஹிக்கமாட்டாதவை யன்ருே. இங்கு முக்தவ்யாபார ந்யாயேந என்று ஸாதித்தது ஜீவநாடியன்ருே. கேவலம் பலாநுபவத்திலூன்றின முக்தனுக்கு ஸாதநாநுஷ்டான ரூபமான செயல் லவலேசமுமில்லை. அது அபேக்ஷிதமுமன்று. ஆனாலும் முக்தன் வாளாவிருப்ப தில்லை; செய்வனவெல்லாம் ஸ்வயம் போக்யமாகக்கொண்டு செய்கிருன். முமுக்ஷு வின் வியாபாரங்களும் அத்தகையனவே யென்று முடித்தருளினவர் நம் தேசிகன்.

14. இவ்வர்த்தத்தைப் பரிபோஷித்து அவர்தாமே அருளிச்செய்துள்ளவை அபாரம். பிள்ளைலோகாசாரியர் "ஸ்வீகாரந்தானும் அவனாலே வந்தது; ஸ்ருஷ்ட் யவதாராதி முகத்தாலே பண்ணின க்ருஷிபலம்" என்றருளிச் செய்த ஸ்ரீஸூக் தியை நிதியாகக்கொண்டு ஸ்வாமி தேசிகன் அருளிய கத்ய பத்யங்கள் அபரி மிதம். அவற்றுள் தலையானது *உபாய: ஸ்வப்ராப்தே ருபநிஷததீதஸ் ஸ பக

வாந் ஆஸத்த்யை தஸ்யோக்தே ஆபத் ந நிதியதாவமகமதீ, கதாரோஹ; பும்ஸாம் ஸுக்ருதபரிபாகேந மஹதா நிதாநம் தத்ராபி ஸ்வயமகில நிர்மாண நிபுண:* என்கிற ரஹஸ்யத்ரயஸாரச்லோகரத்நம். இதில் "நிதாநம் தத்ராபி ஸ்வயம் அகிலநிர்மாணநிபுண:" என்ற நான்காவது பாதமானது "ஸ்ருஷ்ட்யவதாராதி முகத்தாலே பண்ணின க்ருஷிபலம்" என்கிற ஸ்ரீலோகாசார்யதிவ்யஸூக்தியின் ஆதிச்சந்தமென்பதில் ஐயமுண்டோ? * ஸ்வஆப்தேஸ் ஸ்வயமேவ ஸாதநதயா ஜோகுஷ்யமாண: ச்ருதௌ * இத்யாதிகளும் கேவலஸமுத்ரகோஷமா? "எம்பெருமானை அடிபணிகின்றவர்களாகச் சொல்லப்படுமவர்கள் உண்மையில் தாமாக அடிபணிகின்றார்களல்லர்; பின்னையோவென்னில், புழுகுறித்தது எழுத்தாமாப்போலே யத்தனை" என்கிற நம்பிள்ளை ஸூக்தியைப் பெரியவாச்சான்பிள்ளையின் வியாக்கியானங்களிலேகண்ட தேசிகன் அதை ச்லோகபத்தமாக்கினர் * குணக்ஷதலிபிக்ரமாத் உபநிபாதிந: பாதி ந:* என்று; இதைத்தான் குணாக்ஷர ந்யாயமென்பது. இந்த கணக்கிலே தேறுகிற நம்முடைய ஸமவதுஷவஸவ்ணத்தை உபாயமாகக் கொள்ளலாகாதென்று நிலையிட்ட ஆசிரியர்களில் தலைநிற்பவர் நிகமாந்தகுருவரர். இத்தகைய ஸ்வாமிதாமே "ஆபத்தியுங்கூட உபாயமன்றென்று சிலர் அதிவாதம் பண்ணினார்கள்" என்று பரம கம்பீரமாகஸாதிக்கிறார். நியாஸதிலகத்தில் * த்வய்யேகஸ்மிந்நபி விஜஹதோ முக்தவத் ஸாதநத்வம்... ஸூரயோ மே ஸ்வதந்தாம் * என்று, எம்பெருமானைக்கூட உபாயமென்ன ஸஹியாத நித்ய முக்தகல்பர்களான மஹான்கள் திறத்திலே தமக்கு ஆவண்யாதிஸய முள்ளதாகக் கூறுகின்றார். இதற்கு அர்த்தமேகிடையாதா ?

15. கீதா பாஷ்யத்தில் (8—14.) * அநந்யசேதாஸ் ஸததம் யோ மாம் ஸ்மரதி நித்யஸ:, தஸ்யாஹம் ஸுலப: பார்த்த நித்யயுக்தஸ்ய யோகிந:* என்றவிடத்து "தத்வியோஸம் அஸஹமாந: அஹமேவ தம் வ்ருணே; மத் ஆப்த்யநுகுண— உபாஸநவிபாகம் தத்விரோதிநிரஸநம் அத்யர்த்தமத்ப்ரியத்வாதிகஞ்ச அஹமேவ ததாமி இத்யர்த்த:. *யமேவைஷ வ்ருணுதே தேந லப்ய:* இதி ஹி ச்ருயதே." என்றுள்ளவிடத்தில் தாத்பர்ய சந்த்ரிகையில் "உக்தஸ்ய அதிவாதமாத்ரத்வஸங்கா வ்யுதாஸாய ச்ருதிமூலதாம் ஆஹ—யமேவேதி.!; என்றெழுதிவைத்த திருக்கரத்தினலேயே "ஆபத்தியுங்கூட உபாயமன்றென்று சிலர் அதிவாதம் பண்ணினார்கள்" என்றெழுதினல் ஸ்வாமியின் சித்தவ்ருத்தியை என்ன வென்பது. "உக்தஸ்ய ச்ருதிமூலதாம் ஆஹ" என்றோ "ச்ருத்யநுக்ருஹீதோயம் அர்த்த இதி ஆகாஸயதி" என்றோ அவதாரிகை வைக்கலாமாயிருக்க, பல்விடங்களில் கைப்பற்றின அந்த பத்ததியை இங்கே விட்டு "அதிவாத மாத்ரத்வஸங்காவ்யுதாஸாய ச்ருதிமூலதாமாஹ" என்று அவதாரிகை யிட்டருளின ஸ்வாமி *மஹதாமபி கேஷாஞ்சித் அதிவாதா: ப்ருதக்விதா:* என்றெழுதிவைப்பது என்னோ?

16. தேசிக ஸூக்திகளில் ஸததபரிசயம் பண்ணிப்போரும் மஹான்கள் "இன்ன இன்ன விடங்களிலே ஆபத்தியின் உபாயத்வத்தைக் கண்டித்தார்; இன்ன இன்ன விடங்களிலே ஆபத்த்யநுபாயத்வ வாதிகளான மஹாசாரியர்களைக் கண்டித்தார்" என்பதை அறிந்து கொள்ளாமலா இருக்கிறார்கள்? "அறிந்து கொள்ளாம

வில்லை, நன்கறிந்துகொண்டுதானிருக்கிறோம்; அதையெல்லாம் போக்யமாகவே கொண்டிருக்கிறோம்'' என்றல்லது வேறொன்று சொல்லப்போகாது. அப்போது முந்துற முன்னம் இவர்கள் பக்கலிலே தோஷபோக்யத்த ஸித்தித்ததாயிற்றென்று உகப்புதோம். ந்யாஸவிம்ஶதியில் ஆசார்யலக்ஷணம் சொல்லும் முதல் சுலோகத்தில் *ஸித்தம் ஸத்ஸம்ப்ரதாயே* என்றதும் *ஸ்திரதியம்* என்றதும் அதிஶங்கிக்கவேண்டும்படியாயன்றோ வந்து விழுந்தது என்று ஞானப்பிரான் வார்த்தை.

17. அலங்கார ஶாஸ்த்ரத்தில் *ஆக்ஷேப: ஸ்வயமுக்தஸ்ய ப்ரதிஷேதோ விசாரணாத்* என்று ஆக்ஷேபாலங்காரம் கூறப்பட்டது. தான் சொன்னதைத் தானே நிஷேதிப்பதை ஒரு அலங்காரமாக வைத்தார்கள். அவர்கள் இதற்குக் காட்டிய லக்ஷ்யம் ரஸவத்தரம். தாம் நன்கு நிலைநாட்டிய அர்த்தங்களைத் தாமே கண்டிப்பதென்பதற்கு அலங்காரம் தேடவேண்டுமத்தனை. தாம் ஸ்தாபித்ததைத் தாமே கண்டிப்பதென்பதற்குப் பிராட்டி விஷயமொன்றும் ப்ரபத்திவிஷயமொன்றுமாக இரண்டு காட்டினோம். இவற்றுள் பிராட்டி விஷயந்தான் ப்ரக்ருதத்தில் முக்கியமானது. ஏனென்றால் *த்ருஷ்டபூர்வச்ருதோ மூர்க்க:* என்கிற உபாலம்பம் பிராட்டி விஷயகமான நிரூபணத்திலேயே உள்ளதாதலால். ப்ரபத்தி விஷயம் ப்ராஸங்கிகமாக வந்தது. ஸ்வோக்திகண்டனம் ஸ்வயமேவ செய்வதுண்டு என்பதை முதலிக்க வந்தபடியாலே. இதில் இன்னும் சில விஷயங்களையும் கேளீர்.

18. உபநிஷத்துக்களில் எம்பெருமானுக்கு அந்தர்வ்யாப்தியும் பஹிர்வ்யாப்தியும் வஸ்துதோறும் பூர்ணத்வமும் ஓதப்பட்டுள்ளது. பகவத் ஸ்வரூபம் ஒரு வஸ்துவில் பரிஸமாப்தமானால் வேறொரு வஸ்துவில் அது எப்படியிருக்க முடியும்? என்கிற ஶங்கை தோன்றக்கூடியது. இந்த ஶங்கையை ந்யாயஸித்தாஞ்ஜநத்தில் உத்க்ஷேபித்து, ஶாரீரகமீமாம்ஸையில் *க்ருத்ஸ்நப்ரஸக்திர் நிரவயவத்வ ஶப்த கோபோவா* என்கிற பூர்வபக்ஷ ஸூத்ரத்தையும் *ச்ருதேஸ்து ஶப்தமூலத்வாத்* என்கிற ஸித்தாந்தஸூத்ரத்தையும் காட்டி சங்காபரிஹாரம் செய்து முடித்தார். ''அந்யத்ர வித்யமாநஸ்ய அந்யத்ர பூர்ணத்வம் ந ஸ்யாத் இதி சேத்'' என்று நியாய ஸித்தாஞ்ஜனத்திலுள்ள ஶங்காவாக்யத்தையும் *யதாகதம் ஸர்வத்ர பூர்ண ஏவ பகவாந்* என்கிற நிஷ்கர்ஷ வாக்யத்தையும் நன்கு குறிக்கொள்க. நியாய ஸித்தாஞ்ஜநப்ரக்ரியை இங்ஙனே யிருக்க, ரஹஸ்யத்ரயஸார மூலமந்த்ராதிகாரத்தில் நாராயண ஶப்தார்த்த விசாரத்தில்—''வ்யாப்தனுக்கு ப்ரதி வஸ்து பூர்ணத்வமாவது ஒரொரு உபாத்யவச்சிந்ந ப்ரதேஶமே ஸர்வத்தையும் நிர்வஹிக்கவல்ல ஶக்தியுடைத்தா யிருக்கையல்லது வஸ்துதோறும் ஸ்வரூப ஸமாப்தியன்று; இது கொள்ளில் பஹிர்வ்யாப்திக்கு விருத்தமாம்; இத்தை ''அகடிதக்கடநா ஶக்தியாலே நிர்வஹிக்கில் விருத்த ஸமுச்சயங்கொள்ளும் மதங்களிற் படியாம்.'' என்றெழுதப்பட்டுள்ளது; ரஹஸ்யத்ரயஸாரம் நியாயஸித்தாஞ்ஜனத்திற்குக் கண்டனமா? நியாயஸித்தாஞ்ஜநம் ரஹஸ்யத்ரயஸாரத்திற்குக் கண்டனமா? என்கிற சோத்யம் நெடுநாளாகவே அபரிஹ்ருதமாகவுள்ளது. ரஹஸ்யத்ரயஸார வ்யாக்யாதாவன ஸ்ரீமத் பரமஹம்ஸ இஞ்சிமேட்டழகியசிங்கர் நியாயஸித்தாஞ்ஜநத்திலுள்ள நிருபண நிர்ணயங்களைக் காணாதவரல்லர். கண்டு வைத்தும், அதற்கு மிதற்கும் எங்ஙனே ஸமந்வயமென்று ப்ரஸ்தாவலேஶமும் செய்யாதே போயிருப்பது ஒரு சாதுர்ய விசேஷமேயாம்.

19. இனி மற்றொரு விஷயம் கேளீர். ஸச்சரித்ர ரக்ஷையில் ஒரு விஷயம் சர்ச்சிக்கப்படுகிறது, ஸ்ரீராமாயணத்தில் அயோத்யாகாண்டத்தில் (6–2,) *மஹதே தைவதாயாஜ்யம் ஜுஹாவ ஜ்வலிதேஅநலே* என்றுள்ளவிடத்தை யெடுத்துக் கொண்டு, இங்கு மஹத்தான தைவதம் எது? என்கிற விசாரத்தைக் கிளப்பி ஸ்ரீமந் நாராயணன்தானென்கிற பரமார்த்தம் ஸ்தாபிக்கப்பட்டுள்ளது. சிவனுக்கு மஹா தேவனென்று பெயர் இருப்பதால் இங்கு சிவனைச் சொன்னதாகாதோ? என்று கேட்டுக்கொண்டு ஸமஸ்த ப்ரயோகத்தில்தான் சிவப்ரதீதி வருமென்றும் வ்யஸ்த ப்ரயோகத்தில் அது வாராதென்றும் வாக்ப்ரபஞ்சனம் செல்லாநின்றது. இது அநவஸரமான விசாரமல்லவா? சர்ச்சை கொண்டவிடத்தில் "மஹதே தைவதாய" என்றிருக்கிறதே யொழிய 'மஹதே தேவாய' என்றில்லை; இதை யெடுத்துக்கூறி சோத்யத்தை அவலீலையாகக் களைந்திருக்கவேண்டும் "அப்பா! இங்கு தைவத சப்தமிருக்கிறதேயொழிய தேவசப்தமில்லை; ஆகவே ருத்ரப்ரதீதிக்கு ப்ரஸக்தி யில்லை; கதஞ்சித் தத்ப்ரதீதி வந்தாலும் ருத்ர ப்ரத்யாயக ப்ரகரணமல்லாமை யாலே நாம் சொன்னதே பொருள்" என்றிவ்வளவே யெழுதப் போதுமானது. 'ஸமஸ்தமா யிருந்தால்தான் ருத்ரபோதமுண்டாகும்; வ்யஸ்தமாயிருந்தால் அது உண்டாகாது என்றெழுதுவதும், "போதாயநீயாதிஷு மஹாதேவசப்தஸ்ய வ்யஸ்தோபி ருத்ரே ப்ரயோக: ஸம்ப்ரதிபந்நோ த்ருச்யதே" என்றெழுதுவதும், அவ்வளவோடும் நில்லாமல் பாதுகாஸஹஸ்ரத்தில் * நமதி மஹதி தேவே நாகஸிந் தோர் விசீர்ண:* என்று ருத்ரவிவக்ஷையினால் [மஹதி தேவே என்று] தாமே வ்யஸ்த ப்ரயோகம் செய்தருள்வதும் என்னே! 'ஸமஸ்தஸ்யைவ ரூடத்வம்' என் கிற தம்முடைய வாதத்தைத் தாமேயன்றோ கண்டித்தாராகிறார்.

20. இந்த விசாரத்தின் பர்யவஸானம் என்னயிற்றென்பது கேளீர். இந்த அநவஸர விபுலவிசாரத்தினிடையில், அஹிர்புத்ந்யவசநம், விச்வேதேவார்த்தே; விச்வேதேவரூபீ, இத்யாதி ப்ரயோகங்கள் ப்ரமாணிகங்களாக விளங்குகின் றன வென்றும், அவற்றில் ஸம்ஜ்ஞாயாம் அலுக்த்வேநலோகே வ ஸித்தி யிருப்ப தாகவும் 'மஹதே தைவதாய' என்னுமிடத்தில் அப்படியில்லையென்றும் எழுதி வைத்தார். இதைக்கண்ட பித்ருமேதஸாரஸுதீவிலேசநகாரரான வைதிக ஸார்வபௌமர் — "அத்ர கேசித் மந்தா: விச்வதேவார்த்தே இத்யத்ர விச்வபதம் ப்ரதமாபஹுவசநாந்தம் படந்தி; தத் கில சப்தசாஸ்த்ர அநபிஜ்ஞாநாம் அஜ் ஞாநவிஜ்ரும்பிதம்; அலுகதிகாரே அநநுச்சிஷ்டத்வாத். வைச்வதேவம் ஹவிரித் யாதிஷு லுக்தர்சநாத்." என்று கைகூசாமல் எழுதிவைத்தார். ஸம்ஜ்ஞாயாம் அலுக்த்வேந'' என்றெழுதிவைத்தவர் நிகமாந்த குரு ஸார்வபௌமரேயொழிய வேறொருவரல்லர்; ஆகவே வைதிக ஸார்வபௌமர் மேற்கண்ட வாக்யங்களாலே செய்துவைத்த ஸத்காரம் "தாநந்தரேண நிபதேத் க்வ நு மத்ப்ரணாம:" என்ற போஜவார்க்கின்படி வேறோரிடத்திலே சென்று சேர ப்ரஸக்தியில்லையன்றோ. ரஹஸ்யத்ரயஸாரத்தில் த்வயாதிகாரத்தில் *இதி மந்தைரிதம் ப்ரோக்தம் ஸ்ரீமச் சப்தவிரோதத:* என்று ஸர்வாத்மநா அஸ்தாநே எழுதிவைத்ததற்கு தைவக்ருத மான ஸத்காரமன்றோ இது.

21, * இதி மந்தைரிதம் ப்ரோக்தம் * என்றவிடத்தில் விஷயஸ்வரூபம் எத் தகைத்து! ஸ்ரீமச்சப்தவிரோதத: என்கிறாரே, அது எவ்விதமான விரோதம்? என்

பதைச் சிறிது விமர்சிக்கவேண்டாமா இங்கு? ஸாரமாகக் கேண்மின்; "அவனுமவளுங்கூடி உபாயமென்னில், ஸ்ரீமந்நாராயணசரணௌ என்றிருக்கவேண்டும்" என்று யாரோவொரு ஆசார்யர் ஆபாதநம் பண்ணினதாகவைத்து *இதி மந்தைரிதம் ப்ரோக்தமித்யாதி தூஷணம் செய்யப்பட்டுள்ளது. ஆபாதநசரீரம் அப்படி கிடையவே கிடையாது. அப்படியிருப்பதாகவே தாராளமாக வைத்துக்கொள்வோம். ஸ்ரீநாராயணசரணௌ என்னலாமேயொழிய ஸ்ரீமந்நாராயணசரணௌ என்னக் கூடாது என்பது அத்யந்தம் சோசநீயமான மருள். *க்ரந்தஜ்ஞைரபஹாஸ்யம் தத்* என்று தாம் சொன்னது தமக்கேயாகுமத்தனை. முநித்ரயத்தார் வியாக்கியானத்தில் இங்கு "ஸாமாத்யோ ராஜா வததி" என்றுண்டேயொழிய (வதத:) என்றால் சேராது" என்று காட்டினதை மஹா சாஸ்த்ரஜ்ஞரான ஸ்ரீமத் இஞ்சிமேட்டழகிய சிங்கரும் எடுத்துக்காட்டுகிறார். அவர்கள் வததி என்றதை இவர் ஆஹ என்றார்; இவ்வளவேவாசி. வ்யதிகரணஸ்தலத்திற்கு ஸமாநாதிகரண ஸ்தலீய ப்ரயோகத்தை நிதர்சனமாக்குவது சாஸ்த்ரஜ்ஞைரபஹாஸ்யம். ஸ்ரீமந்நாராயண சரண ஸ்தலம் வ்யதிகரணஸ்தலம். ஸாமாத்யராஜஸ்தலம் ஸமாநாதிகரணஸ்தலம். ஸமாநாதிகரணஸ்தலே ஸாமாத்யோராஜா ஆஹ என்றுதான் சொல்லவேணும், ஆஹது: என்னக்கூடாது என்பது கல்வெட்டுதான். அதை இவ்விடத்திற்குக் காட்டுவது ஏலாது, பொருந்தாது, ஸங்கதமாகாது, உசிதமாகாது. அமாத்யனுடைய ஒருமகனும் அரசனுடைய ஒருமகனுமாக இருவர் வந்தவிடத்தில் "ஸாமாத்யஸ்ய ராஜ்ஞ: புத்ரேன ஸமாகதௌ" என்கிற ப்ரயோகம் மேளதாளத்துடன் வரவேற்கப்படும். "ஸாமாத்யோ ராஜா புத்ரத்வயவாந்" என்பதும் இணங்கும்.

22. இவ்விடத்தில் * குரோஸ் ஸதாரஸ்ய நிபீட்ய பாதௌ * என்றதை யெடுத்துக்காட்டினது ருஜுவான நிதர்சனம். ஆனால் அங்கு (பாதௌ) என்றது போலே (பாதந்) என்றும் ப்ரயோகிக்கலாம் – என்பதை நாம் நம்முடைய ஸமஸ்யமாநோக்தி ஸௌஷ்டவவிமர்சமென்கிற (இருநூறு சுலோகங்கள்கொண்டதாய், தமிழுரையோடுங் கூடினதான) நூலில் அலசியலசிக்காட்டியுள்ளோம். ஆளவந்தார் * ப்ரஹ்மேசாதி ஸுரவ்ரஜஸ் ஸதயித: த்வத்தாஸதாஸீகண:* என்று ப்ரயோகித்தருளியிருப்பதை யெடுத்துக் காட்டினபின் சாந்த: கோலாஹல:. ஆக, *இதி மந்தைரிதம் ப்ரோக்தம் * என்றதும் *க்ரந்தஜ்ஞைரபஹாஸ்யம் தத்* என்றதும் அதிதராம் அஸமஞ்ஜஸமென்று முப்பதாண்டுகட்கு முன்னமே முடிக்கப்பட்டதாயிற்று. வைதிகஸார்வபௌமர் செய்துவைத்ததாய், வைதிககோஷ்டிகளில் காருள்ளளவும் கடல் நீருள்ளளவும் வேதமுள்ளளவும் வேதகீதனுள்ளளவும் விளங்கக்கூடியதான ப்ரதிஸ்த்காரமும் ப்ரலயேபி ந லீயதே என்று செப்பேடும் கல்வெட்டுமாக்கப்பட்டது. *த்ருஷ்டபூர்வச்ருதோ மூர்க்க:* *இதி மந்தைரிதம் ப்ரோக்தம்* இத்யாதிகள் ஸதஸ்ஸில் விலைசெல்லமாட்டாதவை யாகையாலே ரஹஸ்யமாக இருக்க ப்ராப்தமேயாம். ... ... ... ... *

வைதிகமநோஹராயாம் விஸ்தரமதிகம் விலோக்ய வித்வாம்ஸ: ;
ஹர்ஷப்ரகர்ஷமேதுரஹ்ருதயா வில்ஸந்தி ஜகதி ஸர்வத்ர.

வைதிக மநோஹராவின் விளக்கம் முற்றிற்று.

---

## அபயப்ரதாநஸாரத்தின் ஸாரநிஷ்கர்ஷம்.

ஸ்ரீராமாநுஜன் 226ல் (பக்கம் 9ல்) "அபயப்ரதாநஸாரத்தில் ஓர் அருமையான் பொருள்" என்னும் மகுடத்தின்கீழ் தேசிகனருளிச்செய்த விலக்ஷண திவ்யார்த்தமொன்றை விளக்கி யிருந்தோம். ஸுக்ரீவ மதம், மாருதி மதம், ஸ்ரீராம மதம்—என்று மூன்றுகப் பிரித்து, விபீஷணன் துஷ்டனுகையாலே த்யாஜ்யன் என்று ஸுக்ரீவ மதமாகவும், அவன் அதுஷ்டனுகையாலே க்ராஹ்யன் என்று மாருதி மதமாகவும் காட்டி, இவ் விருமதங்களிலும் விலக்ஷணமாக "அவன் துஷ்டனுகையாலே க்ராஹ்யன்" என்பது ஸ்ரீராம மதமாக தேசிகாபிமதமென்று விளக்கி யிருந்தோம். இதைக்கண்ட மதுராந்தகவாஸியான நமது ஸுஹ்ருந்மணியொருவர் "ஸ்ரீராம மதம் அப்படியில்லைபோலிருக்கிறதே; அதை நன்குவிளக்கிக் காட்டவேணும்" என்று அவ்யாஜ ப்ரேமப்ரேரிதராய் எழுதியிருந்தார். அந்த ஸஹ்ருதயர் ஸ்ரீமத் இஞ்சிமேட்டழகியசிங்கருடைய ஸ்ரீபாதத்தவராகையாலே அந்த மஹாஸ்வாமியின் ஸ்ரீஸூக்தியைக் காட்டி யுகப்பிக்க விரும்புகிறேன். ஸ்ரீரஹஸ்யத்ரயஸாரத்தில் த்வயாதிகாரத்தில் நாராயண சப்தார்த்தமாகச் சில பகவத் குணங்களை ஸ்வாமி தேசிகன் உபபாதித்து வருகையில் "இவற்றில் வாத்ஸல்யமாவது — *தோஷோ யத்யபி தஸ்ய ஸ்யாத் ஸதாம் ஏததகர்ஹிதம்* என்கிறபடியே .. ......" இத்யாதியாக ஸாதித்த மூலத்தை விவரித்தருளாநின்ற அழகியசிங்கர் தம்முடைய ஸ்ரீஸாரபோதிநியில் (பக்கம் 355ல்) [தோஷ: ஸ்யாத்] "ப்ரார்த்தநாயாம் லிங் தோஷமிருக்கக்கடவது. தோஷமில்லாதவனிடத்தில் நாம் தயயா செய்யவேண்டியது என்ன? என்று பாவம்" என்றெழுதியுள்ளார். இது அபயப்ரதாநஸாரத்திலிருந்து க்ரஹித்ததா? அல்லது ஸ்வகபோலகல்பிதமா? என்று ஸஹ்ருதயர் விமர்சித்துத் தெளிக. விளக்கின் ஒளிக்கு இருளைத் தேடுவாரைப்போலே பெருமாள் தம்முடைய குணப்ரகாசத்திற்கு எதிர்த்தலையில் தோஷத்தை விரும்புகிருரென்பது ரஸிகர்களுக்குப் பரமபோக்யமான அர்த்தமேயொழிய மனக்குற்றமடியாக க்ஷேபிக்கத் தக்கதன்றென்று சுருங்கச்சொல்லி நிற்கிறோம். இந்த ஸுஹ்ருந்மணிக்கு *செய்தாரேல் நன்று செய்தாரென்பர் போலும்* என்ற பாசுரத்தில் போலு மென்பதிலும் சிறிது விசிகித்ஸை யிருப்பதாக அறிகிறோம். திவ்யப்ரபந்தங்களில் போலுமென்று வருமிடங்களை யெல்லாம் இவர் ஊன்றிப்பார்க்கவேணும். *பின் தொடர்ந்தோடியோர் பாம்பைப் பிடித்துக்கொண்டாட்டினுய் போலும்* கற்றுயரோடு நீ கன்றுகள் மேய்த்துக் கலந்துடன் வந்தாய் போலும்* அணியார் வீதியழுந்தூர்—எந்தை பெருமானுர் மருவி நின்ற ஊர் போலும்* .தேவ தேவனூர் போலும் *உதிர்த்த வுரவோனூர் போலும்* தானுமோர் கன்னியுங் கீழையகத்துத் தயிர்கடைகின்ருன் போலும்* வம்பவிழ்கானத்து மால்விடையோடு பிணங்கி நீ வந்தாய் போலும்* பூதவடிவு கொண்டு வாரிவளைத்துண்டிருந்தான்போலும்* இங்ஙனே யெண்ணிறந்தவை யுண்டு. இவை வஸ்து வ்ருத்தியில் இல்லாதவற்றைச் சொல்லுமிடங்களல்ல. அத்தனையும் வஸ்து ஸதுக்திகளே யென்று கண்டு தெளிக. *அபிநிவேச வசீக்ருத சேதஸாம் பஹுவிதாமபி ஸம்பவதி ப்ரம:* என்ற ஆளவந்தார் ஸூக்தி எங்கும் வெற்றி பெறுவது வியப்பன்று. ... ... *



Rgd. No. 2975 ஸ்ரீராமாநுஜன்

மிக முக்கியமான அறிவிப்பு:—நமது ஸத்க்ரந்த ப்ரகாசன ஸபையின் மூலமாக ஸம்பிரதாய நூல்கள் பலவும் அச்சிடப்பட்டு வருகின்றனவென்பது உலகம் பரவியுள்ளது. ஆஸ்திகர்கள் பலரும் இச்சபையில் மெம்பராகச் சேரும்படி கோரப்படுகிருர்கள். இதற்குச் செலுத்தவேண்டிய வருடச்சந்தா ரூ. 25 மட்டுமே. 213 நெ. கோவிந்தப்பநாய்க்கன் தெரு, ஜி. டி. மதராஸ் - இந்த விலாஸத்தில் விவரங்கள் தெரிந்துகொள்க. ... .... ( )

நமது ஸ்ரீவைஷ்ணவ சம்பிரதாய நூல்கள் கிடைக்குமிடங்கள்:—

(1) க்ரந்தமாலா ஆபீஸ், சின்ன காஞ்சீபுரம்.

(2) M. A. KRISHNAMMAL, Advocate,
20, South Mada Street, Triplicane, Madras-5.

(3) A. RAMANUJACHARI, B. A.,
A 230 E. Type, Pandara Road, New Delhi.-11.

If un-delivered please return to:

**P. B. ANNANGARACHARYA,**
L. KANCHEEPURAM.

379. Sri Vangeepuram Raghavacharya,
Melkote,
(Mysore State)



Edited and Published by P. B. Annangaracharya Swami
for Madras Satgrantha Prakasana Sabha.
Printed by T. A. P. Srinivasavaradan at Sri Venkateswara Press,
Sannidhi Street, L. Kanchipuram.